# பொன்னியின் தியாகம்

பெ. தூரன்

விற்பனை உரிமை :
பாரி நிலையம்
59 பிராட்வே · சென்னை 1.

# முன்னுரை

ஓரங்க நாடகம் சிறுகதையோடு பலவகைகளில் நெருங்கிய தொடர்புடையது. இரண்டும் வேறு வேறான உருவம் பெற்றிருந்தாலும் அவற்றின் அடிப்படையை ஆராய்ந்தால் பொதுவான ஓர் ஒற்றுமையைக் காண லாம். ஏதாவது ஓர் உணர்ச்சி அல்லது ஒரு குறிப்பிடத் தக்க சம்பவத்தை மையமாக வைத்துக்கொண்டு அதன் விளைவுகளை மட்டும் பாத்திரங்களின் தன்மைகளுக்கேற்ற வாறு சுருக்கமாகவும், உள்ளத்தில் நன்கு பதியுமாறும் விவரிப்பதில் அவற்றிற்கு இலக்கியத்தில் ஒரு தனிப்பட்ட ஸ்தானம் உண்டு. இரண்டிலும் எத்தனையோ விஷயங்கள் தாமாகவே தொனிக்கும்படியும், படிப்போர் அல்லது பார்ப்போருடைய கற்பனைக்கும் விடப்படுகின்றன.

இவ்வாறு பல ஒற்றுமைகள் இருந்தாலும் சிறு கதைக்கும் ஓரங்க நாடகத்திற்கும் சில தனிப்பட்ட லட்சணங்களும் அமைந்திருப்பதைக் காண்கிறோம். எல்லாச் சிறுகதைகளையும் நாடகங்களாக எழுதி விடலாமா? அதேபோல எல்லா நாடகங்களையும் சிறு கதைகளாக எழுதிவிடலாமா? எழுதலாம். ஆனல், அப்படி எழுத முயலும்போது சிறுகதை என்ற துறை சில விஷயங்களுக்குப் பெரிதும் ஏற்றது என்பதும் ஓரங்க நாடகம் வேறு சிலவற்றிற்குப் பெரிதும் ஏற்ற, என்பதும் தெரியவரும். விரும்பிய பயனைத் தெளிவாக அழுத்தமாகவும் கலைச்சுவையோடும் உண்டாக்குவ அடிப்படை விஷயத்திற்கு ஏற்றவாறு துறைகள் பொருத்தமாக இருக்கும். ஆகைய வகையான இலக்கியத் துறைகள் அவசிய

கலையனுபவத்தைப் பெறச் செய்வதிலேயும் சிறு கதைக்கும் அரங்க நாடகத்திற்கும் ஒரு முக்கியமான வேறுபாடு உண்டு. சிறு கதையின் சுவை முழுவதையும் வெளிப்படுத்த அதன் ஆசிரியனின் திறமையொன்றே போதும்; நாடகத்தைப் பொறுத்த வரையில் அந்தத் திறமை மட்டும் போதாது. நாடகத்தின் சுவை முழுவதும் வெளிப்படுவதற்கு நடிகர்களின் உதவியும் வேண்டும். சிறந்த நடிப்பு, பொருத்தமான காட்சியமைப்பு, ஏற்ற வேஷக்கட்டு முதலியனவெல்லாம் வாய்க்கும்போதுதான் நாடகத்தின் முழு உருவம் எளிதில் புலனாகின்றது.

படித்தே நாடகத்தின் சுவை முழுவதையும் பெற முடியுமா? முடியும். ஆனால், அதற்குத் தனிப்பட்ட பயிற்சியும், படிப்பு முறையும் வேண்டும். நாடகாசிரியன் காட்சியின் தொடக்கத்திலும் இடையிடையேயும் பிறை வளைவுகளுக்குள் கொடுத்திருக்கும் குறிப்புக்களைப் பயன் படுத்திக்கொண்டு பின்னணியாக அமைந்துள்ள காட்சிகளையும் பாத்திரங்களின் உணர்ச்சியலைகளையும் நடத்தையையும் கற்பனை செய்துகொள்ள வேண்டும். பாத்திரங்கள் வாய்விட்டுக் கூறும் சொற்களை அவர்களுடைய தன்மைக்கு ஏற்றவாறு படிப்பவர்களும் கூறிப் பார்க்க வண்டும்.

சிரமம் ஒன்றுமில்லை. சிறிது பயிற்சியிலே இது எளி கிவிடும். நவீனச் சிறு கதைகள் எங்கேயோ திடீ ''று தொடங்குகின்றன; எங்கேயோ திடீரென்று ன்றன. நிகழ்ச்சி முறையையே மாற்றி முன்னால் ப் பின்னாலும், பின்னால் நடந்ததை முன்னா ஏன. "ஒரே ஒரு ஊரிலே ஒருவன் இருந் ரதிரி தொடங்கி வரிசையாக நிகழ்ச்சிகளை

ஆதியோடந்தமாகச் சொல்லும் பழைய கதைகளை யல்லாமல் நவீனச் சிறு கதைகளையும் நாம் புரிந்து கொண்டு அனுபவிக்கப் பழகிக் கொள்ளவில்லையா? வானொலியில் காதால் மட்டும் நாடகங்களைக் கேட்டு அவற்றை நாம் இன்று அனுபவிக்கவில்லையா? அம் மாதிரியே நாடகங்களையும் படித்து நாம் சுவைக்க முடியும். நான் மேலே குறிப்பிட்டதுபோலச் சிறந்த நடிப்பும் பொருத்தமான காட்சியமைப்பும் ஏற்ற வேஷக் கட்டும் அமையாதபோது நாடகத்தைப் பார்ப்பதை விடப் படித்து நமது கற்பனையின் உதவியாலேயே அதன் முழு உருவத்தையும் நன்கு அறியலாம். அப்படிச் சுவைக்கப் பழகிக் கொள்ளும்போது ஒரு புது விதமான கலையனுபவத்தையும் இன்பத்தையும் பெறலாம் என்பதும் திண்ணம்; அதுவே என்னுடைய அனுபவம். நாடகங்களைப் பார்க்க மக்கள் பெருந்திரளாகக் கூடி, ஆர்வங் காட்டுவதுபோல அவற்றைப் படிப்பதிலும் பெரியதோரளவிற்கு ஆர்வங் காட்ட வேண்டும் என்பது எனது விருப்பம். இதன்மூலம் மற்றொரு நன்மையும் விளைகின்றது. நாடகத்தைப் பார்க்கும்போது அதை மேலும் அனுபவிப்பதற்கும் அது துணையாக நிற்கின்றது.

பெ. தூரன்

சமர்ப்பணம்

பி. கே. நடராஜனுக்கு

## பொருளடக்கம்

# பொன்னியின் தியாகம்

கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய பாரி பறம்பு நாட்டையாண்ட சிற்றரசன். கொடைத் திறமையால் அவன் புகழ் ஓங்கியது. புலவர்கள் அவனது பெருமையைப் பாடினார்கள். அதைக் கண்டு பொறாமை கொண்டனர் சேர சோழ பாண்டியரான மூவேந்தரும். பாரியின்மீது போர் தொடுத்து அவனைக் கொன்றொழிக்க முயன்றனர்.

பாரியின் பறம்பு மலையை முற்றுகையிட்டுப் பல நாள் போர் புரிந்தும் மூவேந்தருடைய எண்ணம் கைகூடவில்லை. போரால் வெல்ல முடியாத பாரியைச் சூழ்ச்சியால் வெல்ல மூவேந்தரும் தீர்மானித்தனர் என்றும், புலவர்கள் போல வேடம் புனைந்து பறம்பு மலைக் கோட்டைக்குள் சென்று பாரியைக் கொன்றனர் என்றும் கூறுவார்கள்.

இந்த நிகழ்ச்சிக்கு முன்னதாகவே அவர்கள் வேறொரு சூழ்ச்சி செய்ததாக இந்நாடகம் கற்பனை செய்கிறது.

நாடகத்தில் தோன்றுவோர்

| | |
|---|---|
| மாரன் | வேள்பாரி |
| பொன்னி | சேனாபதி |
| நாகன் | |

# பொன்னியின் தியாகம்

## காட்சி ஒன்று

[பாரி வள்ளலின் பறம்பு மலைக் கோட்டையை முற்றுகையிட்டு, மூவேந்தர்கள் போர் செய்து கொண்டிருக்கிறார்கள். பாரியும் அவனுடைய வீரர்களும், கோட்டையை வீரத்தோடு காத்து நிற்கின்றனர். பல மாதங்களாகியும் மூவேந்தர்களால் கோட்டையைத் தங்கள் பெரிய படை வலிமையைக்கொண்டு பிடிக்க முடியவில்லை. ஒரு நாள் மாலை கோட்டைக்குள்ளே பறம்பு நாட்டு வீரனின் மனைவி பொன்னி, வீட்டுத் திண்ணையில் நின்று தன் கணவனை எதிர்பார்க்கிறாள். அவளுக்கு வயது இருபத்தைந்து இருக்கலாம். அது சமயம் அவளுடைய குழந்தை நாகன்—எட்டு வயதுச் சிறுவன்—ஓடி வருகிறான்.]

நாகன்: அம்மா, இருட்டாய்விட்டதே! இன்னும் அப்பாவைக் காணோமே? அவர் வந்திருப்பாரென்று வேகமாக ஓடிவந்தேன்—விளையாட்டையெல்லாம் விட்டு வந்தேன்...

பொன்னி: இன்னும் கொஞ்ச நேரத்தில் வந்து விடுவார். இப்பொழுதுதான் அவருடைய கடமை முடிந்திருக்கும்.

நாகன்: அம்மா, அப்பா இன்றைக்கு எத்தனைபேரை வெட்டி வீழ்த்தினாரோ? அந்த மூவேந்தர்களும் ஓடிப் போயிருப்பார்களா?

பொன்னி: அவ்வளவு எளிதிலே அவர்களை ஓட்டி விட முடியுமா? அவர்களிடம் பெரிய சேனை இருக்கிறதே?

நாகன் : இருந்தாலும் அவர்களால் ஒன்றும் செய்ய முடியாது. அம்மா, இன்றைக்கு எத்தனைபேர் அப்பா வாளுக்கு இரையானார்கள்? சொல்லம்மா.

பொன்னி : நாகா, அப்பாதான் இப்போது வந்து விடுவாரே? அவரையே கேட்டுக்கொள்.

நாகன் : அம்மா, இன்றைக்கு எனக்கு எல்லாம் தெரிந்துவிட்டது. ஒடி ஓடி வாளை வீசி வெட்ட எனக்குத் தெரியும். நன்றாகப் பழகிக்கொண்டேன்.

[கையில் வைத்திருந்த மரத்தால் செய்த வாளைப் பார்க்கிறான்.]

பொன்னி : அப்படியா? எங்கே வாள் வீசு பார்க்கலாம்.

நாகன் (வாளைச் சிறிது சுழற்றிவிட்டு) : அம்மா, தாத்தாவுடைய அந்தப் பெரிய வாளைக் கொடம்மா. அதை வீசிக் காண்பிக்கிறேன். மரத்திலே செய்த இந்த வாள் எனக்கு வேண்டாம்.

பொன்னி : நாளைக்குப் புதிதாக இன்னும் ஒரு வாள் வீச்சுச் சொல்லிக் கொடுக்கிறேன். நீ அதையும் பழகிக் கொண்டால்தான் அந்தப் பெரிய வாளை உனக்குக் கொடுப்பேன்.

நாகன் : போம்மா, தினமும் நீ இப்படியே சொல்லுகிறாய்.

பொன்னி : தினமும் சொல்லமாட்டேன், கண்ணு— இந்த ஒன்றையும் பழகிக்கொள். கட்டாயம் தாத்தாவி னுடைய வாள் உனக்குத்தான்.

நாகன் : இப்பவே கொடம்மா—நான் இப்பவே பழகிக்கிறேன்.

பொன்னி : இப்போ இருட்டாய்விட்டது. அப்பா வந்துவிடுவார்.

நாகன் : அப்பாவை இன்னும் காணோமே? எத்தனை நேரம் காத்திருக்கிறது? அம்மா, நான் கோட்டை வாசலுக்கு ஓடிப்போய்ப் பார்த்து வரட்டுமா?

பொன்னி : அங்கே நீ போகக்கூடாது.

நாகன் : ஏம்மா போகக்கூடாது? நானும் பறம்பு நாட்டு வீரன் தானே?

பொன்னி : இருந்தாலும் நீ இன்னும் சிறு பையன். பெரியவனான பிறகு போகலாம்.

நாகன் : அம்மா, நான் கோட்டைச் சுவர்மேல் ஏறிப் பார்க்கக்கூடாதா?

பொன்னி : பறம்பு நாட்டு வீரர்களெல்லாம் அங்கே சேர சோழ பாண்டியர்களின் படையை எதிர்த்துப் போர் செய்துகொண்டிருப்பார்கள். இந்த சமயத்திலே போனால் அவர்களுக்கு இடைஞ்சலாக இருக்கும்.

நாகன் : அம்மா, நீதான் சேரநாட்டு அரசனாம்— நான் வேள் பாரியுடைய பறம்பு நாட்டு வீரனாம்— இரண்டுபேரும் சண்டை போடலாம், வா......

பொன்னி (சிரித்துக்கொண்டு) : சரி, வா—அப்படியே விளையாடுவோம்.

நாகன் : அம்மா, நீ தோற்று ஓடவேணும்—நான் தான் உன்னைப் பிடித்துக் கட்டுவேனாம்.

பொன்னி : சரி, அப்படியே ஆகட்டும்.

[பயந்து ஓடுவதாகப் பாசாங்கு செய்கிறாள்.]

நாகன் : அடே, நீ யார் சேர நாட்டு அரசனா? ஏண்டா பயந்து ஓடுகிறாய்? என்னோடு சண்டைக்கு வா, பார்க்கலாம்......

[வாளை ஓங்கிக்கொண்டு மிடுக்காக முன் செல்லுகிறான்.]

பொன்னி: பறம்பு நாட்டு வீரனே, உன்னோடு சண்டையிட என்னால் முடியாது......

[மேலும் ஓடுகிருள்.]

நாகன்: எங்கேடா ஓடுகிறாய்? நீ ஆண் பிள்ளையானால் திரும்பி என்னைப் பார்த்து நில். இத்தனை நாளாக எங்கள் ஊரை வளைத்துக்கொண்டிருந்ததற்குப் பழி வாங்குகிறேன்.

பொன்னி: வீரனே, பேசாமல் என்னை விட்டுவிடு. நான் ஓடிப் போய்விடுகிறேன்.

நாகன்: சேரா, உடனே என்னிடம் பணிந்து சரணமடை. இல்லாவிட்டால் நீ எங்கு சென்றாலும் உனது தலையை இந்த வாளுக்கு இரையாக்காமல் விடமாட்டேன்.

பொன்னி: பறம்பு நாட்டு இளஞ்சிங்கமே, உனது வீரத்தை மெச்சினேன்—உன்னைப் பணிந்தேன்—எனக்கு உயிர்ப்பிச்சை கொடுக்கவேண்டும்...

[முழந்தாளிட்டுப் பணிகிறாள். இருவரும் மகிழ்ச்சியோடு சிரிக்கிறார்கள்.]

நாகன்: வேள்பாரி வெல்க. பறம்பு நாடு வாழ்க!

பொன்னி: வேள்பாரியின் வள்ளன்மை வாழ்க! அவர் புகழ் என்றும் நிலவுக!

நாகன்: அம்மா, நீ எதிரியாக இருந்தால் உன்னைக் கொல்லலாமா?

பொன்னி: ஓ நிச்சயமாகக் கொன்றுவிடலாம்.

நாகன்: அப்பா இந்த நாட்டிற்கு எதிரியாக இருந்தால் அவரைக் கொல்லலாமா?

பொன்னி: தாயும் தந்தையும் தெய்வம் போன்றவர்கள். இருந்தாலும் அவர்கள் நாட்டிற்குப் பகைவர்களாக இருந்தால் அவர்களையும் உனது வாளுக்கு இரையாக்க

லாம். நாட்டிற்கு முன்னாலே தாய் தந்தை, கணவன் மனைவி யாரும் பெரியவரல்ல—நாடுதான் பெரிது.

**நாகன் :** அம்மா—அதோ...அப்பா வந்துவிட்டார். அப்பா, அம்மாதான் சேரநாட்டு அரசனும்—நான் அம்மாவைச் சிறைப் பிடித்துவிட்டேன்.

*[இவ்வாறு கூறிக்கொண்டே மகிழ்ச்சியால் குதிக்கிறான்.]*

**பொன்னி :** இவ்வளவு நேரமாக நாகன் உங்களைக் காணோம் காணோமென்று கேட்டுக்கொண்டே இருந்தான். ஏன் இன்றைக்கு இவ்வளவு நேரம்?

**நாகன் :** அப்பா, அந்த மூவேந்தரும் ஓடிப்போய் விட்டார்களா? நீங்கள்தானே வெற்றியடைந்தீர்கள்?

*[வந்த வீரன் பெயர் மாரன். கோட்டை வாயிலைக் காப்பது அவன் கடமை. அவனுக்குச் சுமார் முப்பது வயதிருக்கலாம்.]*

**பொன்னி :** இன்று ஏன் மிகவும் களைப்படைந்திருக்கிறீர்கள்? பகைவர்கள் பல பேர்களை வெட்டிச் சாய்த்ததால் சோர்வாக இருக்கிறீர்களா?

**மாரன்** (அவள் கேட்ட கேள்விக்கு விடை கூறாமல்): பொன்னி, கொஞ்சம் தண்ணீர் கொண்டுவா.

*[அவன் முகத்திலே சிந்தனை தேங்கியிருக்கிறது.]*

**நாகன் :** அப்பா, அந்த மூன்று அரசர்களும் சேர்ந்து கொண்டு பாரிவேளிடம் சண்டைக்கு வந்திருக்கிறார்களே, அவர்களுக்குக் கொஞ்சமாவது வீரமிருக்கிறதா?

*[பொன்னி உள்ளே சென்று தண்ணீர் கொண்டு வந்து தருகிறாள்.]*

**மாரன் :** பொன்னி, தண்ணீர் ஏன் எப்படியோ இருக்கிறது?

**பொன்னி :** கோட்டைக்கு வெளியிலிருந்து வரும் கால்வாயைப் பகைவர்கள் அழித்துவிட்டார்கள்; இது ஏரித் தண்ணீர்.

மாரன் : இப்படி எத்தனை நாளைக்கு சண்டை போட முடியும்? இதெல்லாம் வீண்தான். இருக்கிறவர்களெல்லாம் சாகவேண்டியதுதான்.

பொன்னி (கவலை தோன்றும் குரலில்) : என்ன சொன்னீர்கள்?

மாரன் : சீக்கிரம் உணவு பரிமாறி வை—நான் சாப்பிட்டுவிட்டுக் கொஞ்ச நேரம் உறங்க வேண்டும். இரவு 12 மணிக்கெல்லாம் எழுந்திருந்து கோட்டை வாசலுக்குச் செல்ல வேண்டும்; ஒரு மணிக்கு எங்கள் முறை வருகிறது.

பொன்னி : ஏன்? உங்களுக்கு அடுத்த வாரந்தானே முறை?

மாரன் : ஆமாம், இதுவரையில் அப்படித்தான் இருந்தது. ஆனால் இந்த ஒன்பது மாதச் சண்டையில் பலபேர் இறந்து போனார்கள். பலபேர் காயமடைந்து கிடக்கிறார்கள். அதனால் மீதியிருக்கிற கொஞ்சம் பேர் தான் எல்லாம் கவனிக்கவேண்டும்.

பொன்னி: உணவெல்லாம் ஆயத்தமாக இருக்கிறது.

மாரன் : என்ன செய்திருக்கிறாய்?

பொன்னி : ஆப்பம்தான் செய்திருக்கிறேன். துவையல் செய்வதற்குத் தேங்காய் இல்லை. புளிக் குழம்பு வைத்திருக்கிறேன்.

மாரன் : எத்தனை நாளைக்கு இப்படி அரைப் பட்டினியாகக் கிடப்பதோ, தெரியவில்லை. இப்படியிருந்து என்னாகப் போகிறது? மீதி இருக்கிறவர்களும் சாக வேண்டியதுதான்.

பொன்னி : போரில் இறந்தவர் வீரசுவர்க்கம் செல்லுவார்களல்லவா? அதைவிடத் தமிழ் வீரனுக்கு வேறென்ன வேண்டும்?

மாரன் (வெறுப்போடு): ஆமாம், எல்லோரும் வீர சுவர்க்கம் புகுந்த பிறகு பாரிவேள் இங்கு யாரை ஆட்சி செய்கிறது? முடியுடை மூவேந்தரும் எதிர்த்து நிற்கும் போது நாம் என்ன செய்ய முடியும்? கொஞ்சங் கொஞ்ச மாக எல்லோரும் செத்து மடிய வேண்டியதுதான்.

பொன்னி: மூவேந்தரும் எதிர்த்தாலும் பறம்புமலைக் கோட்டையை அவர்களால் அசைக்க முடியாது. அதுவும் உங்களைப் போன்ற வீரர்கள் வேள்பாரிக்காக உயிரையும் கொடுக்கத் தயாராக இருக்கும்போது யார்தான் என்ன செய்ய முடியும்?

மாரன்: இருந்தாலும் அவர்களுடைய படை மிகப் பெரியதல்லவா? எத்தனை நாட்களுக்கு ஒரு சிறுகோட்டை யிலுள்ள வீரர்கள் எதிர்த்து நிற்க முடியும்...? அவர்களில் பலபேர் இறந்தாலும் அவர்களுக்குப் பொருட்டில்லை. நம்மில் ஒருவன் இறந்தாலும் அது நமக்குப் பெரிய நஷ்ட மாக இருக்கிறது.

பொன்னி: ஆமாம், அது மெய்தான். ஆனால் சேர சோழ பாண்டியர்கள் வேள் பாரியின் புகழ் பெருகுகிற தைக் கண்டு மனம் பொறாமல் வலியச் சண்டைக்கு வந் திருக்கிறார்கள். பாரியே சண்டைக்குச் செல்லவில்லை. இந்த நிலையிலே வேள் பாரி எதிர்த்து நிற்காமல் என்ன செய்ய முடியும்? அவர் பயந்து பணிந்து போகக் கூடியவர் அல்ல.

மாரன்: கோட்டையிலுள்ள தானியக் களஞ்சியங் களிலே ஒரு தானியமும் இல்லை. உணவில்லாமல் நாம் சண்டை போட முடியுமா?

பொன்னி: வேள் பாரிக்குக் கிளிகள் ஆயிரக்கணக் காக நெற்கதிர்கள் கொண்டு வருகின்றன. அவருடைய

கோட்டைச் சிறப்பையும் வீரத்தையும் கண்டு கிளிகள்கூட அவருக்கு ஏவல் செய்கின்றன. அந்தக் கிளிகள் இருக்கும் வரை நாம் பட்டினி கிடக்கமாட்டோம். நாம் மட்டும் உணவைக் கொஞ்சம் கவனமாகச் செலவழிக்க வேண்டும். அவ்வளவுதான்.

மாரன்: பொன்னி, இதெல்லாம் எத்தனை நாளைக்கு நடக்கும்? மீதியிருக்கும் வீரர்களும் பாரியும் சண்டையில் மடிவதைத் தவிர வேறு ஒன்றும் ஆகப் போவதில்லை. மூவேந்தர் வெற்றியடைவது நிச்சயம். நீங்களெல்லாம் அவர்களுக்கு அடிப்பணி புரியும் தாதிகளாக வேண்டியது தான்.

பொன்னி: சரி, நீங்கள் சொல்வது ஆவேல போர்வ தாக இருந்தாலும் இப்பொழுது நாம் செய்யக்கூடிய தென்ன? பாரிவேளைச் சரணடையச் சொல்லுகிறீர்களா?

மாரன்: சரணடையாவிட்டாலும் நிலைமையை நன்கு உணர்ந்துகொண்டு ஏற்ற காரியம் செய்யவேணும். வெறும் வீரம் பேசி என்ன பயன்? வேள்பாரி எங்களை யெல்லாம் அனுவசியமாகப் பலி கொடுக்க விரும்புகிறார்.

பொன்னி (ஆலோசனையுடன்): வேறு என்ன செய்ய முடியும்? நீங்களே ஒரு யோசனை சொல்லுங்கள் பார்க்கலாம்!

மாரன்: ம்......அப்படி வா வழிக்கு. அப்படிக் கேட்டால் அதுதான் சரி. நானும் என்னுடன் இன்று ஒரு வனிக்குக் கோட்டை வாயிலைக் காவல் செய்யப்போகிற வீற இரண்டு பேரும் ஒரு யோசனை செய்திருக்கிறோம். அதைச் சொல்லட்டுமா?

பொன்னி சொல்லுங்கள் கேட்கிறேன்:

மாரன் : நீ வெளியிலே சொல்லக்கூடாது. இது மிகவும் ரகசியமான காரியம்.

பொன்னி : எதற்காக இத்தனை பீடிகை போடு கிறீர்கள்? இதுவரையில் என்னிடம் நீங்கள் எதையும் ஒளித்து வைத்ததில்லையே?

மாரன் : அதனால்தான் இதையும் உன்னிடம் சொல்ல ஆசைப்படுகிறேன். உனக்காகத்தான் இந்த சூழ்ச்சியை நான் ஒப்புக்கொண்டேன்.

பொன்னி : சூழ்ச்சியா...?—அதென்ன சூழ்ச்சி?

மாரன் : வேள் பாரி வெற்றி பெறுவதென்பது நடக்காத செயல். அதனால் இந்தக் கோட்டைக்குள்ளே மீதி உயிரோடிருக்கிறவர்களையாவது காப்பாற்ற வேண் டும் என்ற நோக்கத்தோடு நாங்கள் ஒரு முடிவு செய்திருக் கிறோம். இன்றிரவு, காவல் காக்கும்போது கோட்டைக் கதவைத் திறந்து விட்டுவிடலாம் என்றிருக்கிறோம்.

பொன்னி (திடுக்கிட்டு): ஐயோ, நாட்டுக்குத் துரோகம் செய்யவா நினைக்கிறீர்கள்?

மாரன் : பொன்னி, உரத்துப் பேசாதே! யார் காதி லாவது விழப் போகிறது. நாங்கள் நன்கு ஆராய்ந்து பார்த்தே இந்த முடிவுக்கு வந்திருக்கிறோம். இதனால் எத்தனையோ பேர் உயிர் பிழைப்பதோடு நமக்கும் பல நன்மைகள் உண்டு. நமக்கு ஏராளமான செல்வம் வரும்.

பொன்னி : செல்வமும் வேண்டாம், ஒண்ணும் வேண்டாம்; மானத்தோடு வாழ்ந்தால் அதுவே போதும். தமிழ் நாட்டு வீரர் மரபில் வந்த உங்களுக்கு இந்தத் துரோகச் சிந்தனை எப்படி வந்தது?

மாரன் : நான் சொல்வதில் என்ன துரோகம் இருக்கிறது? நன்றாக யோசனை செய்து பார். பாரிவேள் இம்மாதிரி எத்தனை நாளைக்கு இன்னும் சண்டை செய்ய முடியும்? எல்லோரும் மடிவதைவிட மீதி யிருப்பவர்களாவது சுகமாக இருப்பார்கள். இதுதான் உண்மையான தேச பக்தி. எனக்கும் பாண்டியனுடைய சேனையில் உயர்ந்த பதவி கிடைக்கும்.

பொன்னி : ஆகா, எவ்வளவு மகத்தான எண்ணம்! யாரோ உங்கள் மனதை இப்படியெல்லாம் கெடுத்திருக்கிறார்கள். நீங்கள் மட்டும் நாட்டுக்குத் துரோகம் செய்ய நினைத்தீர்களானால் நான் தற்கொலை செய்து கொள்ளுவேன். கோட்டைக் கதவைப் பகைவர்களுக்குத் திறந்து விட்ட அந்தப் பாதகக் கையால் மறுபடியும் என்னைத் தீண்டலாம் என்று கனவிலும் கருதாதீர்கள்.

மாரன் : சரி, சரி. உன்னிடம் சொன்னதே தவறாகப் போய்விட்டது. இப்பொழுது இப்படித்தான் பேசுவாய்; நகைகளையும் பணத்தையும் ஏராளமாகப் பார்க்கிற போது உன் மனம் மாறிப் போகும். அப்பொழுது நான் செய்தது சரி என்று உனக்குத் தெரியும்.

பொன்னி : இந்தத் துரோகத்திலிருந்து உங்களை நான் நிச்சயமாகத் தடுக்கப் போகிறேன்—நான் இதை ஒரு நாளும் ஆமோதிக்க மாட்டேன்.

மாரன் : சரி, உன் பேச்சை நிறுத்து—எனக்குப் படுக்கை எடுத்துக்கொண்டுவா.

பொன்னி : என்ன? உணவுகூட வேண்டாமா? சாப்பிட வாருங்கள். சாப்பிடுவதற்குள் நான் வீட்டிற்குள்ளேயே படுக்கையை விரிக்கிறேன்.

மாறன் : வீட்டிற்குள்ளே வேண்டாம்—வெளியில் திண்ணையிலே போடு—ஆப்பத்தையும் இங்கேயே கொண்டு வா.

பொன்னி : இங்கே குளிர் அதிகமாக இருக்குமே—இன்று பனி அதிகமாக இருக்கிறது.

மாறன் : பனியில்தானே காவல் காக்க வேண்டும்! இந்தப் பனியைக் கண்டு பயப்பட முடியுமா? உள்ளே படுத்துக்கொண்டால் அதிக நேரம் தூங்கிவிடுவேன்—பிறகு காரியமெல்லாம் கெட்டுப் போகும்.

## காட்சி இரண்டு

[அதே இரவு. மாறன் வீட்டருகில் பாரி வள்ளலும் அவன் சேனாபதியும் வருகிறார்கள். இருவரும் கம்பீரமான தோற்றமுடையவர்கள். அஞ்சாமையும் உறுதியும் அவர்கள் தோற்றத்திலே வெளிப்படுகின்றன.]

சேனாபதி : காயமடைந்த வீரர்களை யெல்லாம் பார்த்துவிட்டோம். இனித் தாங்கள் அரண்மனைக்குச் செல்லலாமே?

பாரி : சேனாபதி, நமது நகரைச் சுற்றிப் பார்க்க வேண்டாமா?

சேனாபதி : பாரிவள்ளலே, நடுச் சாமம் ஆகப் போகிறது. தாங்கள் சிறிது நேரமாவது ஓய்வு கொள்ளுவது நல்லது.

பாரி : எனக்கு ஓய்வைப்பற்றி எண்ணமே இல்லை. நமது வீரர்களை யெல்லாம் பார்த்து அவர்களுக்கு உற்சாகம் கொடுப்பதுதான் முக்கியமெனத் தோன்றுகிறது.

சேனுபதி : நான் அந்தக் காரியத்தைச் செய்கிறேன் —தாங்கள் அரண்மனைக்குச் செல்லுங்கள். எதிர்பாராத விதமாக இன்று அதிக நேரமாகிவிட்டது.

பாரி : அங்கு சென்றாலும் எனக்கு உறக்கம் வராது. நமது வீரர்களின் தொகை மிகவும் குறைந்துவிட்டது. ஆகையால் அவர்கள் மனங் குன்றாமல் இருக்கும்படி செய்ய வேண்டியது நமது முக்கிய கடமை. உற்சாக மூட்டியே அவர்கள் ஒவ்வொருவரையும் நூறு பேருக்குச் சமானமாகப் போர் செய்யும்படி தூண்டவேண்டும்.

சேனுபதி : தங்களால்தான் இந்தக் காரியம் இயலும் என்பதை நான் அறிவேன். தங்களைப் பார்த்ததும் வீரர்களுக்குப் புதிய உற்சாகமும் வலிமையும் உண்டா கின்றன. இருந்தாலும் இப்படி இரவெல்லாம் அலைந் தால் தங்கள் உடம்புக்குச் சரிப்படாதென்று எனக்குக் கவலையாக இருக்கிறது.

பாரி : (சேனுபதி சொல்லுவதைப் பொருட்படுத் தாமல்) சேனுபதி, இன்று கோட்டை வாயிலைக் காத்த வர்களின் போர்த் திறமையையும் வீரத்தையும் கவனித் தீர்களா? அவர்களுடைய அஞ்சா நெஞ்சம் கண்டு என் உள்ளம் பூரிக்கிறது.

சேனுபதி : அந்த வீரர்கள் உயிரோடிருக்கும் வரை யில் மூவேந்தர்களால் கோட்டையை நெருங்கவே முடியாது.

பாரி : ஒரு வீரனுக்கு இடது தோளிலே அம்பு பாய்ந்த பிறகும் அவன் கோட்டை வாயிலைக் காப்பதி லின்றும் திரும்பி வர மறுத்துவிட்டானே!

சேனுபதி : அவன் ஒரு கையாலேயே கவண் கல் வீசியதைக் கண்டு எனக்கே வியப்பாக இருந்தது.

பாரி: சேனாபதி, வீரர்களுக்குத் தக்க பயிற்சியும் ஊக்கமும் கொடுத்த உங்களை நான் பெரிதும் பாராட்டு கிறேன்.

சேனாபதி: வள்ளலே, தங்களுக்காக இந்தக் கோட்டையிலுள்ள அத்தனை பேரும் உயிரையும் வழங்கத் தயாராக இருக்கிறார்கள்.

பாரி: இந்த வீர மக்களின் உயிரை வீணாக மாய்க்கும்படியாக மூவேந்தர்களும் புறப்பட்டிருக்கிறார் களே, அதை நினைக்கும்போதுதான் என் நெஞ்சம் வருந்துகிறது. இந்தப் போரினால் அவர்களுக்கு என்ன நன்மை கிடைக்கப் போகிறது?

சேனாபதி: தங்களைப் போரிலே வென்றுவிட்டால் அவர்களுடைய புகழ் ஓங்குமென்று நினைக்கிறார்கள்.

பாரி: மூவேந்தர்களும் சேர்ந்துகொண்டு தங்க ளுடைய பெரிய படையை ஏவிவிட்டு ஒரு சிற்றரசனை வெல்லுவதில் அவர்களுக்கு என்ன பெருமையும் புகழும் ஏற்படப் போகின்றன. சிறுமைதான் கிடைக்கும். இத்தனை மாதங்களாக என்னை வெல்ல முடியாமல் போனதே அவர்களுடைய திறமைக்கு இழுக்கல்லவா?

சேனாபதி: பொறாமையால் தூண்டப்பட்டவர் களுக்கு இதெல்லாம் புலப்படாது.

பாரி: அவர்களுடைய பொறாமையை நினைத்தால் தான் எனக்குச் சிரிப்பு வருகிறது.

சேனாபதி: புலவர்களெல்லாம் பாரி, பாரி யென்று தங்களையே புகழ்ந்து பாடிக் கொண்டிருந்தால் அவர் களுக்குப் பொறாமை ஏற்படாதா?

பாரி (சிரித்து): நீங்கள் சொல்லுவது நல்ல ஞாய மாக இருக்கிறது. புலவர்களின் பெருமையறிந்து அவர்

களைப் போற்றினால் மூவேந்தர்களையும் அவர்கள் புகழ்ந்து பாடுவார்கள். அதை விட்டுவிட்டு என்னோடு போர் தொடுத்தால் உள்ள புகழும் மங்கிப் போய்விடும். இது புலவர் பாடும்படியான அருஞ் செயலல்லவே!

சேனபதி : இந்த அறிவுரைகளை எடுத்துக் கூற அவர்களுக்கு யாருமே இல்லை போலிருக்கிறது.

பாரி : அப்படித்தான் தோன்றுகிறது...ம்...ஆனால் நாம் அதைப்பற்றி இப்பொழுது நினைப்பதனால் யாதொரு பயனும் விளையப் போவதில்லை. நம்முடைய கடமையைக் கவனிப்போம்.

சேனபதி : பாரி வள்ளலே, தங்களுடைய உடல் நிலையைப் பாதுகாத்துக் கொள்வதே இப்பொழுது தங்களுடைய முதற் கடமை என்று பணிவோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

பாரி : சேனபதி, நாம் முதலில் மாறனுடைய வீட்டுப்பக்கம் போய்ப் பார்க்கலாம். அவன் இன்று கோட்டை வாயிலைக் காக்கப் போக வேண்டுமல்லவா? அவன் குறித்த காலத்தில் போகிறானா என்று கவனிக்க வேண்டும். பிறகு நான், உறங்கச் செல்கிறேன்.

சேனபதி : மாறனுக்குத் தன் மனைவியிடம் நிறைந்த காதல் உண்டு. அவள் நாள்தோறும் அவனுக்கு உற்சாக மூட்டிப் போர் செய்ய அனுப்புவாளாம்.

பாரி : நானும் அதைப்பற்றிக் கேள்விப்பட்டிருக் கிறேன். இன்று காவலுக்குப் போகுமுன் மாறனும், அவன் மனைவி பொன்னியும் என்ன பேசிக் கொள்ளு கிறார்கள் என்பதை மறைந்து நின்று கேட்போம், வாருங்கள்.

சேனாபதி: நள்ளிரவாகிவிட்டது. இன்னும் சற்று நேரத்தில் மாரன் எழுந்துவிடுவான். அதோ தெரிகிறதே அதுதான் அவனுடைய வீடு.

[மாரன் வீட்டுப் பக்கமாகப் பார்க்கிறார்கள். வீடு மேடையில் தெரிவதில்லை. வேள் பாரிக்கும் சேனாபதிக்கும் மட்டும் தெரிகிறது.]

பாரி: நாம் இப்படி இந்தச் சுவர் ஓரமாக மறைந்து நிற்கலாம். யாரோ உள்ளிருந்து கதவைத் திறக்கும் சத்தம் கேட்கிறது.

சேனாபதி: இதோ அவன் மனைவி பொன்னி. எதற்காகவோ மெதுவாக அவள் வெளியே வருகிறாள். ஒரு வேளை மாரனை எழுப்பிவிடுவதற்காகத்தானிருக்கும்......

பாரி: ஏதோ கலக்கத்தோடு பார்க்கிறாளே? கையில் எதற்காக அவள் ஒரு கத்தியை வைத்திருக்கிறாள்?

சேனாபதி: மாரனுடைய கத்தியாக இருக்கும். அவனிடம் கொடுக்கத்தான் வருவாள்.

பாரி: அவள் முகத்தைப் பார்த்தால் எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. அவள் பதட்டத்தோடு இருக்கிறது போலத் தோன்றுகிறதே!

சேனாபதி (உற்றுப் பார்த்துவிட்டு): ஏனோ திரும்பி வருகிறாளே? அவள் மனத்திலே ஏதோ போராட்டம் போலத்தான் தோன்றுகிறது. நாம் இன்னும் சற்று விலகி நன்றாக மறைந்து நிற்போம் வாருங்கள்.

## காட்சி மூன்று

[முதற் காட்சியில் கண்ட அதே வீட்டு முன்புறம். திண்ணையில் ஒரு கட்டிலில் மாறன் படுத்துத் தூங்குகிறான். பொன்னி வாசலில் ஆலோசனையோடு நிற்கிறாள்.]

பொன்னி (மெதுவான குரலில்): இன்னும் சிறிது நேரத்தில் என் கணவர் எழுந்துவிடுவார். நான் தடுக்காமலிருந்தால் இவருடைய சதியாலோசனை நிறைவேறிவிடும்; அதனால் பறம்பு நாட்டிற்கே பெரும் பழி வந்து சேரும்—அதை நான் பார்த்துக்கொண்டிருக்க முடியுமா? ஐயோ, இவர் இன்று வீட்டுக்குள் வந்து படுத்திருந்தால் வீட்டைப் பூட்டிவிட்டு இவரை இன்றிரவு கோட்டை வாசலுக்குப் போகாமல் தடுத்திருப்பேனே! இப்பொழுது என்ன செய்வது?

[யோசனையோடு இங்குமங்கும் நடக்கிறாள். மறைவில் நிற்கும் பாரியும் சேனாபதியும் அவள் கண்ணில் படுவதில்லை. அவர்கள் தமக்குள் பேசிக்கொள்கிறார்கள்.]

பாரி (தணிந்த குரலில்): சேனாபதி, பொன்னி ஏதோ தீவிரமாக எண்ணமிட்டுக் கொண்டிருக்கிறாள். நாம் எதிரில் செல்லுவோமா?

சேனாபதி (மெதுவாக): சென்றால் உண்மை வெளியாகாது. அங்குமிங்கும் நடந்து ஊசலாடுவதைப் பார்த்தால் ஏதோ முக்கியமான விஷயம் இருக்குமென்று தெரிகிறது. மறைந்து நின்றே நன்கு கவனிப்போம்......

பொன்னி (தனக்குள்ளே மெதுவாக): என் கணவர் நினைத்துள்ள சதியை ஊர்க் காவலாளியிடம் வெளிப்படுத்திவிடட்டுமா? அவ்வாறு செய்தால் இவரை

நாளைக்கு எல்லோருக்கும் முன்னால் துரோகி என்று கழுவிலேற்றுவார்கள். இந்த அவமானத்தை எப்படி சகிப்பது? என் குழந்தை நாகனைத் துரோகியின் மகனென்று தமிழ்நாடு தூற்றுமே. (மறுபடியும் யோசிக்கிருள்) இன்னும் சற்று நேரத்தில் எழுந்துவிடுவாரே? என்ன செய்வேன்?—நாட்டிற்குத் துரோகம் செய்பவன் யாராயிருந்தாலும் கொன்றுவிடலாம் என்று இன்று மாலையில்தானே குழந்தையிடம் கூறினேன்?—யாராயிருந்தால் என்ன? கணவனென்றாலும் அவன் தேசத் துரோகிதானே? ஆமாம், அதைத் தவிர வேறு வழியில்லை. தமிழ் மக்களின் வழிபடு தெய்வமாகிய முருகவேளே, நான் என் நாட்டிற்காக இக்கடமையைச் செய்கிறேன்; நீ என்னை மன்னிக்க வேண்டும். என் கடமை முடிந்ததும் என்னை உன் பாத கமலங்களில் சேர்த்துக் கொள்ள வேண்டுகிறேன்.

[உறுதியோடு விரைந்து சென்று மாரனைக் கத்தியால் ஓங்கிக் குத்துகிருள்.]

மாரன்: ஹா, ஐயோ...யாரோ என்னைக் குத்திவிட்டார்களே—ஹா...என் உயிர் போகிறதே...பொன்னீ நாகா...ஹா...

[மாரன் துள்ளிப் புரண்டு கட்டிலை விட்டுக் கீழே விழுந்து இறக்கிறான். நாகன் அரவங்கேட்டு எழுந்து வெளியே வருகிருன்.]

நாகன்: அம்மா, என்ன சத்தம் கேட்கிறது? அம்மா...உன் கையிலே எதற்காக வாள் வைத்திருக்கிருய்?

[பொன்னி தன்னையே கத்தியால் குத்திக்கொள்ள முயல்கிருள். நாகன் குரல் கேட்டுநிதானிக்கிருள்.]

பொன்னி : கண்ணே, நீ எழுந்துவிட்டாயா? நாகா, நான் போய் வருகிறேன்—உன்னைக் கடவுள் காப்பாற்றுவார்.

[மறுபடியும் கத்தியை ஓங்குகிருள்.]

நாகன் : அம்மா, கத்தியைக் கீழே போடுங்கள்... உங்களுக்கு என்ன நேர்ந்துவிட்டது? என்னை இப்படிக் கண்ணெடுத்துப் பாருங்கள்.

பொன்னி (விம்மிக்கொண்டு) : கணவனைக் கொன்ற கொலை பாதகியை நீ எதற்கடா அம்மா என்றழைக்கிருய்? எனக்கு இந்த உலகிலே வாழ்வில்லையடா...

நாகன் : அம்மா, எனக்காக நீங்கள் வாழவேண்டாமா? எதற்கம்மா அப்பாவைக் கத்தியால் குத்தினீர்கள்.

பொன்னி (விசனத்தோடு) : நாகா, அவர் கோட்டை வாயிலைத் திறந்துவிட்டு சதி செய்ய நினைத்திருந்தார். அது எனக்குச் சம்மதமில்லாததால் இந்தக் காரியம் செய்யத் துணிந்தேன்.

பாரி : சேனாபதி, நாம் இனித் தாமதிக்கக்கூடாது. தாமதித்தால் அவள் உயிர் தரிக்கமாட்டாள்—(முன்னால் தாவிச் சென்று) தமிழ் நாட்டு வீர மங்கையே...உனது நாட்டுப்பற்றை நான் பெரிதும் போற்றுகிறேன்.

பொன்னி : யார், வேள் பாரியா? வள்ளலே! எனது கணவன் ஏதோ பொருளாசையால் ஏமாந்துவிட்டார். அவர் பெரிய வீரர்—அவரைத் தாங்கள் மன்னிக்க வேண்டும்.

பாரி : நீ கவலைப்பட வேண்டாம்; இந்தச் சதியாலோசனையைப்பற்றி வெளியில் தெரியாமல் நான்

பார்த்துக் கொள்கிறேன். சேனுபதி, உடனே சென்று இன்றிரவு கோட்டை வாயிலைக் காக்க வரும் மற்ற இரண்டு பேரையும் கவனித்துக் கொள்ளுங்கள். நான் விரைவில் வருகிறேன்.

சேனுபதி: நல்லது, தங்கள் ஆணைப்படியே செய்கிறேன்.

[சேனுபதி பணிந்து புறப்படுகிருன்.]

பொன்னி: அரசே, எனது கடமை முடிந்தது. இனி எனக்கு இந்த உலக வாழ்வில் விருப்பம் இல்லை.

பாரி: பொன்னி, நீயும் உன் கணவனும் எவ்வளவு அன்பு கொண்டிருந்தீர்கள் என்பது எனக்குத் தெரியும். சுயநலத்தை ஒதுக்கித் தள்ளி நாட்டிற்காக நீ பெரிய தியாகம் செய்திருக்கிருய்—உன்னைப் போன்ற வீர மாதர்களின் வலிமையினுலேயே நான் இன்று மூவேந்தரையும் எதிர்த்து நிற்க முடிகிறது.

பொன்னி: வள்ளலே, இந்தக் குழந்தையைத் தாங்கள் தான் காப்பாற்றவேண்டும்.

[துக்கத்தோடு பாரியைப் பார்க்கிருன். அவன் கண்களில் கண்ணீர் வடிகிறது.]

பாரி: உனது கடமை இன்ருேடு முடிந்து போய் விடவில்லை. இந்தச் சிறுவனை ஒரு நல்ல வீரனுக்கி நம் நாட்டிற்குத் தந்துவிட்டுத்தான் நீ உயிர் துறக்கவேண்டும். அவனுக்கு வயது வரும்வரை நீ வாழவேண்டும்.

பொன்னி: இதுவா தங்களுடைய கட்டளை?

நாகன்: அம்மா அரசர் சொல்லுகிறதை நீ என்றுமே தட்டக்கூடாதென என்னிடம் சொல்லியிருக்கிருயே!

[பொன்னி பாரியின் பக்கம் பார்க்கிருள்.]

பொன்னி: சரி, நான் தங்கள் ஆணைப்படி நடக்கச் சித்தமாயிருக்கிறேன்—கடவுள் என்னை மன்னிப்பாரென்று நம்புகிறேன்—எனது கணவரும்...

பாரி: பொன்னி, கவலைப்படாதே உன்னைப்பற்றி மாரன் பெருமைதான் அடைவான். அவன் காலம் கடந்த இன்ப உலகிலே, உனக்காக அமைதியோடு காத்திருப்பான்; கவலைப்படாதே.

(திரை)

# சர்க்கரையின் கரும்பு

நெட்டிமாலைச் சர்க்கரைப் புலவர் திருவுத்தரகோச மங்கைக்கு அருகிலுள்ள கடாரம் என்னும் ஊரிலே பிறந்தவர். சிறுகம்மையூரில் வாழ்ந்தார். கவி பாடுவதிலும், கம்பராமாயணப் பிரசங்கம் செய்வதிலும் வல்லவர். இவர் நீண்டகால் வாழ்ந்திருந்து திருமலை ரகுநாத சேதுபதி, கிழவனிரகுநாத சேதுபதி, விஜயரகுநாத சேதுபதியாகிய மூவருடைய ஆட்சிக் காலத்திலும் சமஸ்தான வித்துவானாக அமர்ந்திருந்தார். இவர் இயற்றிய நூல்கள் திருச்செந்தூர்க் கோவை, வேதாந்த சூடாமணி உரை முதலியன. நெட்டிமாலைச் சர்க்கரைப் புலவரின் மகன் சீனிப் புலவர். 'சீனிப் புலவரின் மகன் இரண்டாம் சர்க்கரைப் புலவர். இவர்களிருவரும் கவி பாடிப் புகழ் பெற்றிருக்கின்றனர்.

நெட்டிமாலைச் சர்க்கரைப் புலவர் நீண்டகாலம் வாழ்ந்தாரென்று முன்பே குறிப்பிட்டேன். அவருடைய மனைவியார் அவரைவிட அதிக நாள் வாழ்ந்திருந்தாரென்றும் அவர்தான் இரண்டாம் சர்க்கரைப் புலவரை அருமையாகப் பேணி வளர்த்தாரென்றும் நாடகத்தில் கற்பனை செய்யப் பெற்றுள்ளது. அவர்கள் வறுமையிலே வாழ்ந்ததும், அவர்கள் வீட்டில் திருடர்கள் புகுந்ததும் பிறவும் நாடகத்திலே வரும் கற்பனைகள்.

## நாடகத்தில் தோன்றுவோர்

சர்க்கரைப் புலவர்—இவர் நெட்டிமாலைச் சர்க்கரைப் புலவரின் பெயரன்.

கிழவி—நெட்டிமாலைச் சர்க்கரைப் புலவரின் மனைவி.

நான்கு திருடர்கள்.

# சர்க்கரையின் கரும்பு

## காட்சி ஒன்று

[ஒரு சிறு எளிமையான வீடு. அதற்குள்ளே மாலை நேரத்தின் மங்கிய வெளிச்சத்திலே ஒரு தொண்டு கிழவியும் இளங்காளை ஒருவனும் அமர்ந்து உரையாடிக் கொண்டிருக்கிறார்கள். கிழவிக்கு 95 வயதாகிறது. காலத்தேரின் அடிச்சுவடே போல அவள் முகத்தில் அத்தனை சுருக்குகள் தென்படுகின்றன. இளைஞனின் முகத்திலே அறிவின் ஒளியும் கவிதை யுணர்ச்சியின் அலையோட்டமும் புலனாகின்றன.]

சர்க்கரைப் புலவர் : பாட்டி, உங்களுடைய துன்பம் எல்லாம் தீர்ந்துவிட்டதல்லவா?

கிழவி : நீ இருக்கும்போது எனக்கு என்ன குறை?

சர்க்கரைப் புலவர் : நான் இருந்து உங்களுக்கு என்ன சுகம் கிடைத்தது? என்னை வளர்ப்பதற்காக நீங்கள் எவ்வளவு சிரமப்பட்டிருக்கிறீர்கள்! இந்தப் பத்து வருஷங்களாக உங்களுக்கு ஒரு வேளையாவது நல்ல உணவு உண்டா?

கிழவி : நீதானே இன்று எனக்கு ஏராளமான பொன்னும் மணியும் கொண்டு வந்திருக்கிறாய்?

சர்க்கரைப் புலவர் : அது என்னுடைய கவித்திறமையால் அல்லவே! ரகுநாதசேதுபதி என் பாட்டனார் சர்க்கரைப் புலவரை எண்ணியே இவ்வளவு பெரிய பரிசிலை எனக்குக் கொடுத்தார்.

கிழவி: உன் பாட்டனரிடம் அவருக்கு அளவு கடந்த மரியாதை உண்டு.

சர்க்கரைப் புலவர்: ஏன் பாட்டி, பாட்டனருக்கு அரசர் அந்தக் காலத்திலே பரிசில் வழங்கவில்லையா?

கிழவி: வழங்காமல் என்ன? எவ்வளவோ பொருள் கொடுத்தார்.

சர்க்கரைப் புலவர்: பிறகு அதெல்லாம் என்ன ஆயிற்று? நீங்கள் இத்தனை காலமாக வறுமையிலே வாடிக் கொண்டிருந்தீர்களே?

கிழவி: உன் பாட்டனருக்குச் செல்வம் வருவதும் தெரியாது, போவதும் தெரியாது. அவர் மறையும் போது அவருக்கு 90 வயது. அந்தக் காலத்திற்குள்ளே அவர் எத்தனை ஆயிரம் பொன்னைப் பார்த்தாரோ! ஆனல், கடைசியிலே அவர் ஒன்றுமே வைத்துப் போக வில்லை.

சர்க்கரைப் புலவர்: அவருக்கு நெட்டிமாலைச் சர்க்கரைப் புலவர் என்று பெயர் ஏற்பட்டதைக் குறித்துச் சமஸ்தானத்திலே பேசிக்கொண்டார்கள்.

கிழவி: என்ன சொன்னர்கள்?

சர்க்கரைப் புலவர்: அரசர் ஒரு சமயம் அவருக்கு நெட்டிமாலை ஒன்று வழங்கினராம்.

கிழவி: இதுதான நீ கேள்விப்பட்டது? அதிலே ஒரு ரசமான சம்பவம் இருக்கிறதே?

சர்க்கரைப் புலவர்: அதை யாரும் எனக்குக் கூற வில்லையே!

கிழவி: உனக்குத் தெரிந்திருக்கும் என்று எண்ணி யிருப்பார்கள்.

சர்க்கரைப் புலவர் : அது என்ன சம்பவம்?

கிழவி : ஒரு சமயம் உன் பாட்டனார் சேதுபதியின் முன்னிலையில் கம்பராமாயணப் பிரசங்கம் செய்தார். கடல்தாவு படலத்திலே ஹநுமாருடைய சாகசத்தைப் பற்றி இவர் வெகு உணர்ச்சியோடு சொல்லிக்கொண்டிருந்தார். அந்தச் சமயத்திலே அரசர், 'ஹநுமார் எப்படிக் கடலைத் தாண்டிக் குதித்தார்?' என்று கேட்டார். உற்சாக மிகுதியால் உன் பாட்டனார், 'இப்படித்தான் தாவிக் குதித்தார்' என்று கூறிக்கொண்டே தமது ஆசனத்தைவிட்டு எழுந்து உயரத் தாவினார். அதனால் விதானத்திலிருந்து அழகாகத் தொங்கிக் கொண்டிருந்த நெட்டிமாலை ஒன்று அறுந்து இவருடைய கழுத்திலே விழுந்தது. விதானத்தின் கோலத்தைக் குலைத்து விட்டோமே என்று பாட்டனாருக்கு வருத்தந்தான். ஆனால் அரசருக்கு ஒரே ஆனந்தம். அந்த மாலையை அப்படியே கழுத்தில் அணிந்துகொள்ளும்படி அவர் கேட்டுக்கொண்டார். அது முதல் இவருக்கு அப்படிப் பெயர் வந்தது.

சர்க்கரைப் புலவர் : பாட்டி, சமஸ்தானத்திலே பாட்டனாரைப் புகழ்ந்து பேசாதவர்களே இல்லை.

கிழவி : நீ அவருடைய பெயர் எடுக்கவேண்டும். அதுதான் என்னுடைய விருப்பம்.

சர்க்கரைப் புலவர் (சிரித்துக் கொண்டே) : அவர் சர்க்கரைப் புலவர்; நானும் சர்க்கரைப் புலவன், பிறந்த போதே பெயர் எடுத்துவிட்டேன் அல்லவா?

கிழவி : ஓ! இரட்டிப்பாக எடுத்திருக்கிறாய்! அதனால் தான் உனக்கு இரட்டிப்புப் பரிசில் அரசர் கொடுத்திருக்கிறார்.

[அவள் முகத்தில் புன்முறுவல் தவழ்கிறது.]

சர்க்கரைப் புலவர் : பாட்டி, நான் மதுரைக்குப் போகவேண்டிய அலுவல் இருக்கிறது. இன்றைக்கே புறப்படட்டுமா?

கிழவி : மதுரைக்கா? அங்கே இப்பொழுது ஏதாவது பிரசங்கமா?

சர்க்கரைப் புலவர் : இல்லை பாட்டி, வேறு காரியம்...

கிழவி : அதென்ன அப்படி என்னிடம் சொல்ல முடியாத காரியம்?

சர்க்கரைப் புலவர் : உங்களிடம் சொல்ல முடியாமல் என்ன? முன்பே சொல்லியிருக்கிறேனே!

கிழவி : ஓகோ, அந்தப் பெண் விஷயந்தானே?

சர்க்கரைப் புலவர் : இப்பொழுதுதான் நமக்குச் செல்வம் வந்துவிட்டதே, காரியத்தை விரைவில் முடித்து விடலாம் என்று நினைக்கிறேன். வீட்டு வேலைகளை யெல்லாம் கவனித்துக்கொண்டு இன்னும் எத்தனை நாட்களுக்கு நீங்கள் இப்படித் துன்பப்படுவீர்கள்?

கிழவி : ஆமாம் அப்பா, தகுந்த இடத்திலே உனக்குத் திருமணம் நடந்துவிட்டால் என் ஆசையெல்லாம் நிறைவேறிவிடும். பெண் நல்ல குணவதிதானே?

சர்க்கரைப் புலவர் : அப்படித்தான் நான் கேள்விப் படுகிறேன்.

கிழவி : குணந்தான் முக்கியமாக வேண்டியது. அதைப்பற்றி நன்றாக விசாரித்து அறிந்துகொண்டு பிறகு தீர்மானம் செய்.

சர்க்கரைப் புலவர் : பாட்டி, நீங்கள் ஒரு முறை யாவது அங்கே சென்று பெண்ணைப் பார்த்து வர வேண்டும். உங்களுக்குப் பிடித்தால்தான் நான் மணந்து கொள்வேன்.

கிழவி : உனக்குச் சம்மதமென்றால் அதுவே போதும், நான் இந்தத் தள்ளாத வயதில் எங்கே அத்தனை தூரம் போகப் போகிறேன்? ஆமாம், நீயாகவே போய் எப்படி...?

சர்க்கரைப் புலவர் : இல்லை பாட்டி, நான் தனியாகப் போகமாட்டேன். அன்று கூறினேனே அந்த நண்பரும் வருகிறார். அவரே எல்லாம் கவனித்துக்கொள்வார். இன்றைக்குப் புறப்படுவது அவருக்கு வசதியாக இருக்கு மென்று சொன்னார்.

கிழவி : அப்படியானால் போய் வா. கூட வருகிற வர்கள் சௌகரியத்தை முதலில் கவனிக்க வேண்டும். ஆனால் போவதற்கு முன்பு இந்தப் பரிசிற் பொருள்களை யெல்லாம் எங்காவது பத்திரப்படுத்தி வைத்துவிட்டால் நல்லது. இந்தக் காலத்திலே திருட்டு அதிகமாம்.

சர்க்கரைப் புலவர் : அதைப்பற்றிக் கவலை என்ன பாட்டி? நம் வீட்டிற்கு எந்தத் திருடன் வரப் போகிறான்? நம்முடைய நிலைமைதான் நாடறிந்ததாயிற்றே! இன்று புதிதாகப் பெருஞ் செல்வம் கிடைத்ததை யார் அறிவார்கள்?

கிழவி : அப்படி நினைக்கக்கூடாது. எதற்கும் எச்சரிக்கையாக இருப்பது நல்லதுதானே?

சர்க்கரைப் புலவர் : எங்கே , வைப்பது? நம்மிடம் இரும்புப் பெட்டியா இருக்கிறது?

கிழவி : இதோ இந்தப் பானையிலே எல்லாவற் றையும் வைத்துப் புறக்கடையிலே ஒரு பக்கத்திலே புதைத்து வைத்துவிடலாம்.

சர்க்கரைப் புலவர் : சரி, உங்கள் விருப்பப்படியே செய்கிறேன். ஆனால் அவ்வளவு எச்சரிக்கை அநாவசியம் என்று தோன்றுகிறது.

கிழவி : எனக்கென்னவோ பயமாகத்தான் இருக்கிறது. இத்தனை நாட்களாகக் குப்பைக் கீரையை உண்டு காலந்தள்ளிய வருத்தம் உனக்குத் தெரியாதா?

சர்க்கரைப் புலவர் : அந்தக் காலந்தான் மலையேறி விட்டதே! இனி ஏது பஞ்சம்?

கிழவி : கிடைத்த பொருளைப் பாதுகாத்து வைத்திருந்தால்தான் அப்படி நினைக்கலாம்?

சர்க்கரைப் புலவர் : பாட்டி, நீங்கள் சொல்லுகிற படியே செய்கிறேன். புதைத்து வைத்துவிட்டு நான் புறப்படலாமல்லவா?

கிழவி : அப்புறம் விருப்பம்போல் போய்க் காரியத்தை முடித்துக்கொண்டு வா.

## காட்சி இரண்டு

[அதே வீடு. விளக்கு மங்கலாக எரிகிறது. இரவு ஒரு மணிக்கு நான்கு திருடர்கள் உள்ளே நுழைகிறார்கள். கிழவி திடுக்கிட்டு எழுந்து பார்க்கிறாள்.]

கிழவி (அதட்டிய குரலில்) : யாரடா அது?

முதல் திருடன் : கிழவி, பயப்படாதே, நாங்கள் தான்.

கிழவி : உங்களுக்கு இங்கே என்ன சோலி?

முதல் திருடன் : சோலி இல்லாமலா இந்நேரத்திலே வருவோம்? நீ சும்மா படுத்துத் தூங்கு.

கிழவி : அடே, திருட்டுப் பயல்களா, மரியாதையாக வெளியே போய்விடுங்கள். ' இல்லாவிட்டால்......

முதல் திருடன் : இல்லாவிட்டால் என்ன செய்வாயாம்? (மற்றவர்களைப் பார்த்து) ஏண்டா, எல்லோரும் குட்டிச்சுவர்போல் நிற்கிறீர்கள்? சீக்கிரம் காரியத்தை முடித்துக்கொண்டால் இந்தக் கிழவியம்மாளாவது கொஞ்சம் நிம்மதியாகத் தூங்குவாள். சும்மா காலத்தைப் போக்காதீர்கள்.

கிழவி : டேய், உனக்கென்ன கேலியாகவா இருக்கிறது? நான் சத்தம் போட்டு ஊரை எழுப்பி விடுவேன்.

முதல் திருடன் : கிழவி, உன்னுடைய குரல்தான் வீட்டுக்குள்ளேகூடக் கேட்காதே? வீணாக ஏன் பயமுறுத்தப் பார்க்கிறாய்? அதிகமாகத் தொந்தரவு கொடுத்தாயானால் உன்னைக் கட்டி வைத்து வாயில் துணியை வைத்து அடைக்க வேண்டிவரும். அந்தமாதிரியெல்லாம் தொந்தரவு கொடுக்கமாட்டாய் என்று நினைக்கிறேன்.

[மற்ற திருடர்கள் சோதனை போட ஆரம்பிக்கிறார்கள்.]

கிழவி (கோபத்தோடு) : டேய், இது தெய்வத்திற்கு அடுக்குமா?

முதல் திருடன் : கிழவி. உனக்கு நூறு வயசு இருக்குமா?

கிழவி : அதைப்பற்றி உனக்கென்ன?

முதல் திருடன் : இல்லை, இத்தனை வயசாகியும் உனக்குத் திருடர்களின் தன்மை தெரியவில்லையே! தெய்வத்திற்கு அடுக்குமா அடுக்காதா என்று பார்த்துக்கொண்டிருந்தால் எங்களுடைய தொழில் நடக்குமா?

கிழவி : என் பேரன் சர்க்கரைப் புலவன் இருந்திருந்தால் அப்பொழுது தெரியும் உங்களுடைய.

இரண்டாம் திருடன் : அடே, இங்கே ஒரு மண்ணையும் காணோம். வரும்போதே இன்றைக்குச் சகுனம் சரியாக இல்லையென்று சொன்னேனே.

மூன்றும் திருடன் : நான் அப்பொழுதே புலவன் வீட்டுக்குள்ளே நுழையக் கூடாது என்று சொல்லவில்லையா?

நான்காம் திருடன் : பெயர்தான் சர்க்கரையாக இருக்கிறது. இங்கே சர்க்கரையும் கிடையாது. மண்ணும் கிடையாது.

கிழவி : டேய் பயல்களா, சாமான்களை யெல்லாம் தாறுமாறாய்ப் போடாதீர்கள்.

முதல் திருடன் : கிழவி, உன் வீட்டில் அப்படி என்ன சாமான் இருக்கிறது?

இரண்டாம் திருடன் : வாங்கடா, போகலாம். புலவன் வீட்டுக்குள்ளே இருந்தாலும் நமக்குத் தரித்திரம் பிடித்துக்கொள்ளும்.

நான்காம் திருடன் : ஏன் கிழவி, சேது சமஸ்தானத்திற்கு இந்தச் சர்க்கரை போயிருந்ததாமே?

கிழவி : அதைக் கண்டுதான் இந்த ஈக்கள் திருட்டுத்தனமாக மொய்க்க வந்ததாக்கும்?

நான்காம் திருடன் : பார்த்தாயாடா, புலவன் மனைவி புலவன் மனைவிதான். அந்த வாசனை இருக்கும் அல்லவா? பேச்சுத் திறமை பார்த்தாயா?

முதல் திருடன் : கிழவி, சமஸ்தானத்திலே ஒன்றும் கிடைக்கவில்லையா?

மூன்றும் திருடன் : அதெல்லாம் அந்தக் காலம். ஒரு பாட்டைக் கேட்டுவிட்டு ஊர் ஊரையே கொடுக்க இப்போது யாருக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது?

முதல் திருடன் : இல்லை, அரசன் ஏதாவ கொடுக்காமல் இருக்கமாட்டான். கொடுத்துத் தொலைக்கா விட்டால் இந்தப் புலவர்கள் போன இடத்திலெல்லாம் தூற்றுவார்களே.

இரண்டாம் திருடன் : அப்படி நினைத்துத்தான் இங்கே கூட்டி வந்தாயாக்கும்?

நான்காம் திருடன் : கிழவி, சமஸ்தானப் பரிசையெல்லாம் எங்காவது ஒளித்து வைத்து விட்டாயா? உண்மையைச் சொல்லிவிடு.

இரண்டாம் திருடன் . வாங்கடா போகலாம். வெறுங் கதையெல்லாம் என்னத்திற்கு? பார்த்தா தரித்திரம் பொங்கி வழிகிறது. அவள் எங்கே வைத்திருக்கப் போகிறாள்?

முதல் திருடன் : டேய், வந்துட்டு வெறுங் கையோடு போகக்கூடாது. எதையாவது ஆளுக்கொன்று எடுத்துக் கொள்ளுங்கள்.

நான்காம் திருடன் : எதை எடுக்கிறது? சட்டி வேணுமானால் நாலைந்து இருக்கின்றன. கிழவி பாவம்! நாளைக்கு எதிலே கஞ்சி காய்ச்சுவாள்?

மூன்றாம் திருடன் : அதோ, ஏடுகள் இருக்கின்றனவே, அவைகளில் ஆளுக்கு இரண்டு எடுத்துக்கொள்ளலாம்.

நான்காம் திருடன் : என்னத்திற்கு? இங்கிருந்தால் கறையானாவது சாப்பிடும். நாம் அதை என்ன செய்வது?

இரண்டாம் திருடன் : ராவிலே குளிர் அதிகமாயிருந்தால் கொஞ்சம் தீயில் போட்டுக் குளிர் காயலாம். எடுங்கடா.

[ஏடுகளை எடுக்கிறார்கள்]

கிழவி (திடுக்கிட்டு): அட பாவிகளா!

நான்காம் திருடன்: டேய், எல்லா ஏடுகளையும் தூக்காதீர்கள். அடுத்த பதினெட்டாம் பெருக்கில் ஆற்று வெள்ளத்தில் விடுவதற்குக் கிழவிக்குக் கொஞ்சம் வையுங்கள்.

கிழவி: டேய், நீங்கள் எதை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள்; இந்த ஏடுகளை மட்டும் தொடாதீர்கள்.

நான்காம் திருடன்: பாட்டியம்மா, ரொம்பத் தாராளமாய்ப் பேசுகிறாயே? இங்கே எடுக்கிறதற்கு வேறு என்ன இருக்கிறது?

முதல் திருடன்: வேறு ஏதாவது இருந்தால் இந்த ஏட்டை நாங்கள் ஏன் தொடுகிறோம்?

கிழவி: உங்களுக்குத்தான் அவற்றால் உபயோகம் இல்லையே! பிறகு எதற்கு எடுத்துக் கொள்ளுகிறீர்கள்?

முதல் திருடன்: நாங்கள் வந்ததற்கு ஏதாவது எடுக்காமல் போகமாட்டோம். அது எங்கள் தர்மம்.

இரண்டாம் திருடன்: சீக்கிரம் எடுத்துக்கொண்டு வாருங்களடா. கிழவி, நெருப்புக் குச்சி இருக்கிறதா? வெளியிலே குளிராக இருக்கிறது. இந்த ஏடுகள் குளிர் காயவாவது உதவட்டும்.

நான்காம் திருடன்: டேய், சும்மா கிழவி கிழவி என்று சொல்லாதேடா. வயசு நூறு இருக்கும்போல் இருக்கிறது. பாட்டியம்மான்னு சொல்லடா.

முதல் திருடன்: பாட்டியம்மா, போய்விட்டு வருகிறோம்.

[புறப்படுகிறார்கள்.]

கிழவி : ஐயையோ! அந்த ஏடுகளை வைத்துவிட்டுப் போங்களடா. அவைதானடா எங்கள் சொத்து.

நான்காம் திருடன் : அப்படியா? அப்படியானால் உன்னுடைய சொத்துதான் எங்களுக்கு வேணும்.

கிழவி : உங்களை நான் வேண்டிக் கொள்கிறேன். பொன்னையும் பொருளையும்விட இவைதாம் உயர்ந்தவை.

முதல் திருடன் (திரும்பிப் பார்த்து : கிழவி, போய் விட்டு வரட்டுமா?

கிழவி : உங்களுக்குப் பொன் வேண்டுமானால் கொடுக்கிறேன். இந்தச் சுவடிகளை என்னிடம் கொடுத்து விடுங்கள்.

நான்காம் திருடன் : பொன் கொடுத்தால் இந்தச் செல்லரித்த ஏடுகளை நாங்கள் கையில் தொடுவோமா?

கிழவி : அடே, இது மெய்தானா? சத்தியமாகச் சொல்வீர்களா?

முதல் திருடன் : நாங்கள் சொன்னால் பேச்சு மாற மாட்டோம். எங்களுக்கு அந்த வழக்கம் இல்லை.

மூன்றாம் திருடன் : ஆயிரம் தடவை சத்தியம் செய்து விட்டு, பிறகு அதைக் காற்றிலே விடுகிற பழக்கம் எங்களிடம் இல்லை. எங்களுக்கு சத்தியத்திலே நம்பிக்கை கிடையாது. ஆனால் சொன்ன பேச்சைத் தப்ப மாட்டோம்.

இரண்டாம் திருடன் : டேய், இதெல்லாம் என்னத்திற்குப் பேசவேண்டும்? இந்தக் கிழவியிடம் பொன்னா இருக்கிறது? புறப்படுங்களடா?

கிழவி : இந்த ஏடுகளையெல்லாம் வைத்துவிடுங்கள். என்னிடம் இருக்கிற பொன்னையெல்லாம் கொடுத்து விடுகிறேன்.

முதல் திருடன் : அப்படி வா வழிக்கு. பொன் கொடுத்தால் இந்த ஏட்டை வீசி எறிந்துவிட்டுப் போய் விடுகிறோம்.

கிழவி : அதோ, புறக்கடையிலே அந்தச் சுவருக்குப் பக்கத்திலே தோண்டிப் பாருங்கள். பானையிலே நிறையப் பொன்னும் மணியும் இருக்கும். எடுத்துக் கொண்டு ஏடுகளை வைத்துவிட்டுப் போங்கள்.

முதல் திருடன் : டேய், இரண்டு பேர் போய்ப் பாருங்களடா.

[இரண்டு பேர் புறக்கடைப் பக்கம் ஓடுகிறார்கள்.]

நான்காம் திருடன் : கிழவி, நீ சொல்லுவது மெய் தானா? அல்லது சும்மா கதை விடுகிறாயா?

கிழவி : உங்களுக்குப் பொன்தானே பெரிது எடுத்துக் கொள்ளுங்கள். பொன்னால் பெறுகிற இன்பம் என்ன இன்பம்? இந்த ஏடுகள் தரும் இன்பத்திற்கு அது ஈடாகுமா?

[புறக்கடைப் பக்கம் சென்றவர்கள் பானையுடன் வருகிறார்கள்.]

மூன்றாம் திருடன் : அடே, கிழவி சொன்னது நிஜந் தாண்டா. அடேயப்பா, பெரிய பொக்கிஷமடா!

நான்காம் திருடன் : கிழவியம்மா, போய்விட்டு வருகிறோம். போகிறதற்கு முன்னாலே ஒரு சந்தேகம் கேட்கிறேன். உனக்கு ஏதாவதுகொஞ்சம் பைத்தியம் உண்டா?

கிழவி : உங்களுக்கு என்ன தெரியும் அந்த ஏடு களின் மதிப்பு?

இரண்டாம் திருடன் : பாட்டியம்மா, நெட்டிமாலைச் சர்க்கரைப் புலவர் இருந்தாரே அவருக்கு நீங்கள்......?

முதல் திருடன் : அவர் வீட்டுக்காரிதாண்டா. கிழவிக்கு வயசு நூத்துக்குமேல் இருக்கும்.

நான்காம் திருடன் : அடடே ! இதுதான் அந்தச் சர்க்கரைக்குக் கிடைத்த கட்டிக்கரும்பா ? பேஷ் ! நல்ல கரும்படா. பாட்டியம்மா, போய்விட்டு வருகிறோம்.

[அவர்கள் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு போகிறார்கள்.]

கிழவி (தானாகவே பேசிக்கொண்டு நிற்கிறாள்) : இந்தப் பரிசில் போனால் இன்னொரு பரிசில் கிடைக்கும். ஆனால் இந்த ஏடுகளை அந்தப் பயல்கள் தீயில் போட்டு விட்டால் மறுபடியும் கிடைக்குமா ? என் பேரன் சர்க்கரைப் புலவன் இருக்கும்போது பரிசிலுக்கா பஞ்சம்? பரிசில் கிடைக்கா விட்டாலும் போகிறது. இந்தக் கவிதைகள் தருகிற இன்பம் போதுமே! இவை எனக்கு மட்டுமா இன்பம் கொடுக்கும்? தமிழ் இருக்கிற வரையில் எல்லா மக்களுக்கும் என்றும் இன்பம் கொடுக்குமே! நல்ல வேளை, அந்தத் திருடர்கள் இவற்றை விட்டுப் போய் விட்டார்கள். என் பேரன் பரிசில் கொண்டுவந்த போது கூட எனக்கு இத்தனை மகிழ்ச்சி ஏற்படவில்லை.

[அவள் முகத்திலே புன்னகை அரும்புகிறது. நிம்மதியாக உறங்கச் செல்கிறாள்.]

திரை

# காதலின் பொய்

பாஞ்சாலங் குறிச்சியைப் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் ஆண்ட வீரபாண்டியக் கட்டபொம்மனைப் பற்றி இன்று தமிழகத்தில் அறியாதவர்கள் இருக்கமாட்டார்கள். ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியாருக்கு வரி செலுத்த மறுத்த காரணத்தால் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையை 1799 செப்டம்பர் 4-ஆம் தேதி ஆங்கிலேயர் முற்றுகை யிட்டனர். பீரங்கிப் படையின் தாக்குதலைச் சமாளிக்க முடியாது கட்டபொம்மன், கோட்டையை விட்டு ரகசியமாக வெளியேற வேண்டியதாயிற்று. வெளியிலே சென்று புதுப் பலம் தேடி ஆங்கிலேயரை எதிர்க்க வேண்டும் என்பது அவர் கருத்து. ஆனால் அவர் எண்ணம் கைகூடவில்லை. வஞ்சனை யாக அவர் காட்டிக் கொடுக்கப்பட்டதும், தூக்கிலிடப்பட்டதும் வரலாறு கூறும் உண்மைகள்.

கட்டபொம்மன் கோட்டையை விட்டு வெளியேறி மறைந்திருந்த காலத்தில் ஏற்பட்ட ஒரு நிகழ்ச்சியாக இந் நாடகம் கற்பனை செய்யப்பட்டுள்ளது. உயிர்த் தியாகம் செய்ய முன்வந்த ஆட்டிடையனும், அவன் தாயும், காதலியும் கட்டபொம்மனைக் காட்டிக் கொடுத்த அரசர்களுக்கு முன்னால் ஒப்பற்ற உள்ளப் பண்பும் தேசபக்தியும் வாய்ந்தவர்களாகக் காட்சியளிக்கிறார்கள். இந்நாடகத்திற்கு அடிப்படையான கதையமைப்பை நான் ஆங்கிலத்திலிருந்து பெற்றேன் என் பதையும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

## நாடகத்தில் தோன்றுவோர்

| | |
|---|---|
| மருதமுத்து | கும்பெனி வீரர் தலைவன் |
| அவன் தாய் | சார்ஜன்ட் |
| தெய்வானை | நான்கு சிப்பாய்கள் |

# காதலின் பொய்

காட்சி ஒன்று

[நாட்டுப் புறத்திலே ஒரு கழனியிலே தனியாக வுள்ள ஒரு சாதாரண வீடு. பொழுது விழுந்து இருட்டிப்போன சமயம். தெய்வானை என்ற இளங்கன்னி வீட்டிற்குள்ளே இருக்கிறாள். அவளுக்குப் பதினாறு வயதிருக்கும். காதல் பொங்கும் வதனம். மருதமுத்து என்ற இளைஞன் அவசரமாக வீட்டிற்குள் நுழைகிறான்.]

தெய்வானை (மகிழ்ச்சியோடு): அத்தான். இவ்வளவு நேரமா?......

மருதமுத்து: தெய்வானை, நீ எப்போ இங்கே வந்தே?

தெய்வானை: அந்தி நேரத்தில்தான் வந்தேன். அப்பா இங்கே கொண்டுவந்து விட்டுப் போனார்.

மருதமுத்து: வெளியூருக்கா போனார்?

தெய்வானை: ஆமாம், வர இரண்டு நாள் பிடிக்கும். அதுவரைக்கும் நான் தனியாக இருக்கப்படாதுன்னு இங்கே கூட்டி வந்தார்......நான் இங்கே வந்தது உங்களுக்குப் பிடிக்கவில்லையா?

மருதமுத்து: எனக்கா பிடிக்காது? நம்ம கல்யாணத்துக்கு ஒரு மாசமிருக்குது. அதுவே எனக்கு ஒரு யுகம்போலத் தோணுது. அப்புறம் நாம் ரெண்டுபேரும் எப்பவும் இங்கே சேர்ந்தே இருப்போம்.

தெய்வானை : அத்தான், இன்று முதலே உங்களோடு இருந்து விடணும்னு எனக்கு ஒரே ஆசை.

மருதமுத்து : தெய்வானை, எனக்கும் அதுதான் ஆசை ..... ஆனால்......இன்னும் ஒரு மாசந்தானே ?......அம்மா எங்கே ?

தெய்வானை : அத்தை சுள்ளி எடுத்துவரப் போனாங்கோ...அதோ அவங்கதான் வர்றாப்போல இருக்குது.

[மருதமுத்துவின் தாயார் உள்ளே நுழைகிறாள். வயது முதிர்ந்த கிழவி அவள்.]

மருதமுத்து : அம்மா, ஒரு முக்கியமான சேதி...... ரொம்ப அவசரம்—

கிழவி : என்ன சேதி? தெய்வானை வந்திருக்கிறா... அதுதானே சேதி?

[புன்முறுவல் செய்கிறாள்]

மருதமுத்து : அது முக்கியந்தானம்மா........ஆனால் நான் வேறொரு காரியமா வந்திருக்கிறேன்......சீக்கிரத்திலே இருபத்தஞ்சு பேருக்கு சமையல் ஆகணும்?

கிழவி (சிரித்துக்கொண்டே) : என்னடா, இன்னைக்கே கலியாணத்தை வச்சுட்டியா என்ன ?

மருதமுத்து : இது கலியாணத்தைவிட ரொம்ப முக்கியம்...அம்மா, நம்ம கட்டபொம்மு ராஜா இல்லே...? அவருக்கும் அவருடைய வீரர்களுக்கும் சோறு கொண்டு போகணும்.

கிழவி : மருதமுத்து, நீ என்ன சொல்றே?—புரியும் படியாகத்தான் சொல்லேன். ராஜாவுக்கு நீயா சோறு...?

மருதமுத்து : அம்மா, நம்ம கட்டபொம்மு ராஜா ஒரு சண்டையிலே...தோத்துப் போனாரு. கோட்டையை

இங்கிலீசுக் கும்பெனிக்காரன் பிடிச்சுட்டான். இப்போ நம்ம ராஜா தலைமறைவா இருக்காரு. மறுபடியும் கோட்டையைப் பிடிக்க ஆள் சேர்த்துக்கிட்டு இருக்காரு—

கிழவி: அது உனக்கு எப்படித் தெரியும்?

மருதமுத்து (அடங்கிய குரலில்): இன்னைக்கு நான் பெரிய மேட்டுக் காட்டிலே ஆடு மேய்ச்சிக்கிட்டு இருந்தேன்......எப்பவும் போல பாடிகிட்டே மரத்தடியில் உட்கார்ந்தேன். அப்போ ஒரு ஆள் எங்கிட்டே வந்து இந்தச் சேதியைச் சொன்னான். கட்டபொம்மு மேலே நான் பாட்டுப் பாடிக் கொண்டிருந்ததைக் கேட்டு அவனுக்கு என்னிடத்திலே நம்பிக்கை பிறந்துட்டுது......

தெய்வானை: கட்டபொம்மு ராஜா எங்கே ஒளிஞ்சிக்கிட்டிருக்காரு?

மருதமுத்து: அவரும் அவர் ஆள்களும் வடக்கே அந்த...

கிழவி: உஸ்......மருதமுத்து! அதையெல்லாம் நீ வெளியில் சொல்லாதே.

மருதமுத்து: என்னம்மா, தெய்வானையிடங் கூடச் சொல்லக்கூடாதா?

கிழவி: எதுக்கும் நீ எச்சரிக்கையா இருக்கணும். அவள் சிறுசுதானே? இந்த ரகசியம் வெளியாகவேபடாது.

மருதமுத்து: இப்போ அவங்களுக்கு சாப்பாடு உடனே பண்ணணும்......ரெண்டு நாளாப் பட்டினியாம். வெளியிலே தலைகாட்ட முடியலையாம்.

கிழவி: ஏன், கும்பெனிப் படை அவங்களைத் தேடி அலைஞ்சிட்டு இருக்குதா?

மருதமுத்து : ஆமாம். கட்டபொம்மு ராஜாவைப் பிடிச்சுக் கொடுத்தா லட்ச லட்சமாப் பணம் கிடைக்குமாம். அவரைக் கொண்ணுட்டாக்கூடப் போதுமாம்...... அவர் தோத்துப்போன சமயத்திலே பிடிச்சுக்கிடணும்னு எங்க பார்த்தாலும் கும்பெனி சிப்பாய்கள் தேடராங்களாம்.

தெய்வானை : அத்தே, நான் அடுப்புப் பத்த வைக்கட்டுமா?

கிழவி : ஆமாம், நீ இங்கே வந்தது நல்லதாச்சு. இல்லாதபோனு இருபத்தஞ்சு பேருக்கு அவசரமா சமையல் பண்ண என்னலாகுமா?

மருதமுத்து : அம்மா, சீக்கிரமா ஆகணும். இருட்டு வேறே கருகும்னு வருது. காய் ஏதாவது இருக்குதா?

கிழவி : இருபத்தஞ்சு பேருக்கு ஆகிற மாதிரி காய் வீட்டிலேது? புளிக்குழம்புதான் வைக்கவேணும்.

மருதமுத்து : ராமப்பன் காட்டிலே பூசனிக்காய் காய்ச்சிருக்குது—நான் போய் ஒண்ணு கேட்டு வாங்கி வரட்டுமா? ஒரு பொறியலாவது ராஜாவுக்குச் செய்து போட வேண்டாமா?

கிழவி : போய்ட்டு சீக்கிரமா வா? நீ வரத்துக்குள்ளே சோறும் குழம்பும் ஆகிவிடும். விஷயத்தை யாருக்குமே சொல்லிவிடாதே.

மருதமுத்து : இல்லேம்மா, அது எனக்குத் தெரியாதா?

கிழவி : ஆடு குட்டிகளையெல்லாம் பட்டியிலே நல்லா அடைச்சுவிட்டு வந்தாயா?

மருதமுத்து அப்படியே அதையும் பார்த்துவிட்டு வந்துடறேன்......தெய்வானை, சுறுசுறுப்பா எல்லாம் பண்ணு; நான் ஒரு நாழியிலே போய்ட்டு வந்துடறேன்...

[அவசரமாகப் புறப்படுகிறான்.]

கிழவி: தெய்வானை, அந்தக் கதவைச் சாத்தித் தாளைப் போடு.

[தெய்வானை கதவைச் சாத்தித் தாளிடுகிருள்.]

தெய்வானை: அத்தே, புளி எங்கே இருக்கிறது? பானையிலா...?

கிழவி: ஆமாம், அதோ அந்தப் பானையிலே இருக்குது...எடுத்துத் தண்ணியிலே கரை...நான் அரிசியைக் களைந்து உலையிலே போடறேன்.

காட்சி இரண்டு

[திரை விழுந்து மறுபடியும் விலகுகிறது. முன்பிருந்த அதே காட்சி தோன்றுகிறது. கிழவியும் தெய்வானையும் பரபரப்புடன் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள்.]

தெய்வானை (பலகணியில் எட்டிப் பார்த்துவிட்டு): வெளியிலே ஒரே இருட்டாக இருக்குது...மழை வருமோ என்னமோ?

கிழவி: பாவம், கட்டபொம்மு ராஜா எங்கே தலை மறைவாகக் காட்டிலேயும் புதரிலேயும் இருந்து கஷ்டப் படுகிறாரோ?

தெய்வானை: இந்தக் கும்பெனிக்காரனுக்கு நம்ம தேசத்திலே என்ன சோலி, அத்தே?

கிழவி: ஊரு ரெண்டுபட்டாக் கூத்தாடிக்குத் தொக் குத்தானே? நம்ம தேசத்து ராசாக்களெல்லாம் ஒருத்தருக் கொருத்தரு சண்டை போட்டுக்கிட்டு வெள்ளைக்

காரனுக்கு ஆளாகப் போறாங்க. கட்டபொம்மு ராஜாதி தான் தைரியமாக் கும்பெனிக்காரனை எதிர்த்து நிக்கிறாரு.

[கதவைத் தட்டும் சப்தம் கேட்கிறது.]

தெய்வானை : அத்தே, யாரோ கதவைத் தட்டறாங் களே?

கிழவி : இத்தனை சீக்கிரத்திலே மருதமுத்து வர முடியாதே? என்ன வேகமா வந்தாலும் இன்னும் ஒரு நாழியாவது ஆகுமே?

[மறுபடியும் உரத்துக் கதவைத் தட்டும் சப்தம் கேட்கிறது.]

தெய்வானை (யோசனையோடு) : கதவைத் திறக் கட்டுமா?

கிழவி : சரி, திற. யாரா இருந்தாத்தான் என்ன?

[தெய்வானை கதவைத் திறக்கிறாள். கும்பெனி வீரர்களின் தலைவன் உள்ளே நுழைகிறான்.]

தெய்வானை (பயப்பட்டு) : ஹா, யாரு? அத்தே, யாரோ வெள்ளைக்காரன்...

கும்பெனி வீரர்தலைவன் (அதட்டும் குரலில்) : ஏய் யார் வீட்டிலே? டேய் சார்ஜண்ட், உள்ளே வாடா, இந்த வீட்டை சர்ச் பண்ணு. கதவைத் தாழைப் போடு... யாரையும் விடாதே.

[சார்ஜண்ட் உள்ளே வருகிறான்.]

கிழவி (அமைதியாக) : அய்யா, நீங்கள் யார்?

தலைவன் : நானா? நான்தான் உங்கள் பாட்டன்.

[சிரிக்கிறான்.]

சார்ஜண்ட் : அம்மா, இவர் கும்பனிப் படைக்குத் தலைவர். இந்தத் துரை கட்டபொம்மனைப் பிடிக்க வந்திருக்கிறாரு.

தலைவன் : இங்கே கட்டபொம்மன் வந்தானு? என்ன கிளவி, உனக்கு என்னமாவது தெரியுமா?

கிழவி : எனக்கு அதெல்லாம் எப்படி அய்யா தெரியும்? நாங்கள் ஆடு மேய்ச்சுப் பிழைக்கறவங்க...

தலைவன் : டேய் சார்ஜன்ட், ஏண்டா சும்மா நிற்கிருய்? சுத்திப் பாரடா.

சார்ஜன்ட் : அம்மா, இந்த வீட்டிலே வேறே யாராவது இருக்காங்களா? இங்கே ஆண் பிள்ளை ஒருத்தரும் இல்லையா?

கிழவி : இங்கு வேறு யாருமே இல்லே, என் மகன் தான் இருக்கிருன்,

சார்ஜன்ட் : உம் மகன் எங்கே இப்போ?

கிழவி : அவன் ஆட்டுக்கிடைக்குப் போயிருக்கிருன்.

தலைவன் : இந்நேரத்தில் மறுபடியும் அங்கெதற்குப் போகிருன்? கொஞ்ச நேரத்துக்கு முன்னேதானே அங்கிருந்து வந்திருப்பான்?

கிழவி : ஆட்டுக் குட்டிகளை யெல்லாம் பாத்துட்டு வருவான்.

சார்ஜன்ட் : தினமும் அப்படி ராத்திரிக்குப் போவாரு?

கிழவி : அவசியமிருந்தா போகத்தானே வேணும்?

சார்ஜன்ட் : கட்டபொம்மன் இந்தப் பக்கத்தில் தான் எங்கேயோ ஒளிந்திருக்கிருனென்று தெரியுது. உங்களுக்கு யாரும் சொல்லலையா?

கிழவி : நாங்க தனியா இந்தக் காட்டுக்குள்ளே இருக்கிறோம். எங்களிடம் யாரு வந்து சொல்லுவாங்க? எங்களுக்கு ஒன்னுமே தெரியாது.

தலைவன் : இந்தக் குட்டி யாரு?

கிழவி : அவள் என் மருமக.

தலைவன் : ஒகோ, உன் மகனுக்குக் கல்யாணம் ஆச்சா? ஏ புள்ளே—உன் புருஷன் உங்கிட்டே அந்தக் கட்டபொம்மனைப்பத்தி சொல்லலியா?

கிழவி : அவனுக்கென்ன தெரியும்? அவனுக்கு இன்னும் கலியாணம் ஆகல்லே—அடுத்த மாசந்தான் கலியாணம்.

தலைவன் (சிரித்து) : ஒகோ கலியாணத்துக்கு முன்னேயே இங்கே வந்துட்டாளா? கிளவி—என்னுடைய சிப்பாய் இருபத்தஞ்சு பேருக்கு நீ இப்போ சோறு போடனும்.

கிழவி : அத்தனை பேருக்கு நான் ..சோத்துக்கு எங்கே போவேன்?

தலைவன் : டேய் சார்ஜன்ட, வீட்டை நல்லா சோதனை போடுடா. போட்டுட்டு போகலாம்—நேர மாகுது.

[சார்ஜன்ட் அடுப்பங்கரையில் வருகிறன்.]

சார்ஜன்ட் : ஸார். இங்கே பாருங்கோ—சோறு நிறையப் பண்ணியிருக்குது.

தலைவன் : ஆ! அப்படியா? கிளவி, இத்தனை சோறு யாருக்குப் பண்ணினுய்? அப்பவே எனக்கு சந்தேகம் வந்தது.

கிழவி (சட்டென்று) : அது எங்களுக்குத்தான்.

தலைவன் : ஏய் கிளவி, பொய்யா சொல்றே? இங்கே இருக்கிறது அம்பது பேருக்காகுமே?

கிழவி : நாளேக்கெல்லாம் சேத்துப் பண்ணியிருக்கிறேன்.

[கதவைத் தட்டும் சத்தம் கேட்கிறது.]

தலைவன் : யாரடா கதவைத் தட்டரவன்? டேய் சார்ஜன்ட், கதவை திறந்து பாரடா?

[சார்ஜன்ட் கதவைத் திறக்கிருன். மருதமுத்து உள்ளே நுழைகிருன்.]

சார்ஜன்ட் : ஸார், இதோ கிளவி மகன் வந்துட்டான்.

தலைவன் : ஏண்டா பையா? கட்டபொம்மனுக்கு நீயா சோறு கொண்டுபோய்க் கொடுக்கிறே?

மருதமுத்து : நீங்க யாரு? எதுக்கு இங்கே இன்னேரத்திலே.........

[சுற்றிலும் பார்க்கிருன்.]

தலைவன் : டேய், சமாச்சாரத்தை முதல்லே சொல்லு. எல்லாம் எனக்குத் தெரிஞ்சு போச்சு. இந்தக் கிளவி எல்லாம் சொல்லிப்பூட்டா.

கிழவி (சட்டென்று) : நாஜென்ன சொன்னேன்? எங்களுக்கு ஒன்னும் தெரியாதுன்னுதான் சொன்னேன்.

தலைவன் : கிளவி, இதெல்லாம் எனக்குத் தெரியும். மகனுக்கு உஷார் பண்ணரையா? டேய் பையா, யாருக்கடா இத்தனே சோறு பண்ணச் சொன்னே?

மருதமுத்து (மிடுக்கோடு) : அது யாருக்காளுலும் உனக்காக அல்ல.

தலைவன் : ஒகோ அத்தனே துடுக்குக்காரனு நீ?—உள்ளதை ஒளிக்காமல் சொல்லிவிடு. இல்லாப்போனு நீ அந்தக் குட்டியைக் கலியாணம் பண்ணிப் பிழைக்க மாட்டாய்.

மருதமுத்து : இந்தப் பேச்சிலே நான் மிரண்டுட மாட்டேன்.

தலைவன் : கட்டபொம்மன் ஒளிந்திருக்கிற இடம் உனக்குத் தெரியாதா?

மருதமுத்து : என் ஆட்டுப்பட்டியிலே அவர் கிடையாது. வேணும்னு வந்து பார்.

தலைவன் : பின்னே எதுக்கு இத்தனை சாப்பாடு?

மருதமுத்து : அதைப்பத்தி உனக்கென்ன கவலை? என்னோடே ஆடு மேய்க்கிறவங்களுக்கெல்லாம் நான் போடுவேன்.

தலைவன் : எங்கே ஒத்தரையும் காணமே? பொய் தானே சொல்றே?

மருதமுத்து : அந்த வழக்கம் எங்ககிட்டக் கிடையாது.

தலைவன் : டேய், சார்ஜன்ட் இவனைப் பிடித்துக் கட்டு. இன்னும் நாலு சிப்பாயைக் கூப்பிடு.

[சார்ஜன்ட் வெளியே போய் உரத்துக் கூவுகிறான். நான்கு சிப்பாய்களுடன் வீட்டிற்குள் நுழைகிறான்.

தெய்வானை (இரங்கிய குரலில்) : ஐயா, அவரை எதுக்குக் கட்டுறீங்க?

தலைவன் : என்ன குட்டி, புருசன் மேலே அத்தனை அக்கறையா?

கிழவி : சும்மா வாயிலே வந்ததெல்லாம் பேச வேண்டாம். அவளுக்கு இன்னும் கலியாணம் ஆகல்லே.

தலைவன் : ஓகோ, கிளவி ரொம்ப தைரியசாலி போலிருக்குது. சார்ஜன்ட், இந்தப் பயலை வெளியிலே கொண்டுபோய் நிறுத்து. உண்மையை சொல்லாதபோனு அவனைத் துப்பாக்கியாலே சுட்டுவிடு.

சார்ஜன்ட் ; இவனையா சுடுவது? இவன்...

தலைவன் : டேய், ஷட் அப். நான் சொல்றபடி செய்.

தெய்வானை (பயந்து) : ஆ......அத்தான்......

கிழவி : தெய்வானை, நீ சும்மா பயப்படாதே காரண மில்லாமே என் மகனை அவன் சுட முடியாது. அதைத் தெய்வமே பொறுக்காது.

தலைவன் : டேய் பையா, நீ உண்மை சொல்ல மாட்டாயா ? இப்போ உன் உயிர் என் கையிலே இருக் கிறது.

மருதமுத்து : இந்த மிரட்டலுக்கு நான் பயப்படு றவனல்ல.

தலைவன் : சார்ஜன்ட், வெளியே இவனை நிறுத்து. நாலு வீரர்களைத் துப்பாக்கியை லோடு பண்ணச்சொல். சுடறத்துக்குத் தயாரா நிறுத்து. பிறகு இங்கே வா.

[சிப்பாய்கள் மருதமுத்துவைக் கட்டியிழுத்துச் செல்லுகிறார்கள். சார்ஜன்டும் வெளியே போகிறான்.]

தலைவன் : கிழவி, இதோ பார். நீ உள்ளதை சொல்லாதபோனு உன் மகனைச் சுடும்படி ஆர்டர் செய் வேன். வீணு அவன் செத்துப் போவான்.

கிழவி (நிதானமாக) : சாகிறதும் பிழைக்கிறதும், நம்ம கையிலா இருக்குது ? அவனுக்கு ஆயுசு முடிஞ்சா உன்னுலேகூட அவனைப் பிடிச்சு வைக்க முடியாது.

தலைவன் : என்ன வேதாந்தமா பேசறே ? இந்த தேசத்திலேதான் ஆடு மேய்க்கிற கிழவிகூட வேதாந்தம் பேசறதை நான் பார்க்கிறேன்—அது கிடக்கட்டும். கட்ட பொம்மன் இருக்கிற இடத்தைச் சொன்னுல் உனக்கு நிறையப் பணம் கிடைக்கும். நீயும் உன் மகனும் மரு மகளும் சொகமா இருக்கலாம். உனக்கு லட்சம் வராகன் இப்பவே கொடுக்கிறேன்......இதோ பார்.

கிழவி : லட்சம் வராகஞ ? அது என்னத்துக்கு ? நாலு ஆட்டுக்குட்டியிருந்தா எனக்குப் போதும்.

தலைவன் (கோபமாக) : டேய் சார்ஜன்ட், இங்கே வாடா. இந்தக் கிளவி எதுக்கும் மசியமாட்டேங்கரு. அந்தப் பயலைப் போலவே பிகுவா இருக்கிரு.

சார்ஜன்ட் : ஸார், வெளியே அந்தப் பையனை நிறுத்தியிருக்கிறேன். நாலு சிப்பாய் துப்பாக்கியோட ரெடியா இருக்கானுக.

தலைவன் : இந்தா, இந்தக் கிளவியை புடித்து இழுத்துப்போ. அவ மகன் சாகிறதை கண்ணிலே பார்க்கட்டும். கிட்டக் கொண்டு போய் நிறுத்து.

தெய்வானை (கலவரத்தோடு) : அத்தே, ஐயோ— நான் என்ன செய்வேன்.

கிழவி : தெய்வானை, பயப்படாதே. கடவுள் நம்மைக் காப்பாத்துவார்.

[கிழவியைப் பிடித்து வெளியே தள்ளிக்கொண்டு போகிருர்கள்.]

தலைவன் : என்னே புள்ளே, நீயும் அவன் சாகிறதைப் பார்க்கணுமா?

தெய்வானை : ஐயா, உங்களுக்குக் கொஞ்சங்கூட இரக்கமில்லையா ?

தலைவன் : உள்ளதைச் சொல்லிட்டா, நான் உங்களை ஒண்ணும் செய்யமாட்டேன்!

தெய்வானை : அவருக்குத்தான் தெரியாதுன்னு சொன்ருரே ?

தலைவன் : அதை நான் நம்பவே முடியாது. நீ பண்ணியிருக்கிற சாப்பாடு விசயத்தைச் சொல்லுதே ?

இளவி ஜாடை பண்ணினாலும் அந்தப் பயல் பேசற பேச்சும் எனக்குத் தெரியாதா என்ன ?

தெய்வானை : ஐயா, என்மீது இரக்கம் காட்டுங்க.

தலைவன் : உனக்காகத்தான் பாக்கரேன். அந்தப் பையனை கலியாணம் பண்ணிக்கிட்டு[வாளணும்னு ஆசை யிருந்தா நீயாவது சொல்லிப்புடு. பணம் வேற கிடைக்கும்.

தெய்வானை (சில விநாடிகள் தாமதித்து, பிறகு சட் டென்று) : ஐயா, நான் சொல்லிட்டா அவரை விட்டுடு றீங்களா ?

தலைவன் : உடனே விட்டுடறேன். நீ சொல்லாத போனு இதோ இந்த விசிலை ஊதினுல் உடனே நாலு குண்டு அவன் நெஞ்சிலே பாயும். சிப்பாய்கள் நீட்டிய துப்பாக்கியோடு தயாரா இருக்காங்க.

தெய்வானை : இல்லே, இல்லே, சொல்லிப்பிடறேன்— கட்டபொம்மு இங்கத்தான் ஒளிஞ்சிருக்காரு.

தலைவன் : ம்......அப்படி வா வழிக்கு. அவனுக்குத் தானே இந்தச் சாப்பாடு ?

தெய்வானை : ஆமா. சத்தமாப் பேசாதீங்க. அத்தான் காதிலே படக்கூடாது.

தலைவன் : கட்டபொம்மன் எங்கே இருக்கிறுன் ?

தெய்வானை : இங்கிருந்து தெக்காலே போனு அங்கே ஒரு ஓடை இருக்குது......அங்கே பாறைக்குகை ஒன்று இருக்கும். அதிலேதான்.

தலைவன் (சிரித்துக் கொண்டு) : ம்............பேஷ். காதலா?......அதுதான் விஷயம் வெளியாய்ட்டுது...டேய் சார்ஜன்ட், இங்கே வாடா.

சார்ஜன்ட் : ஸார், உண்மை தெரிஞ்சுதா?

தலைவன் : ஆமாம், அந்தப் பயலைக் கட்டி இழுத்துக்கினு போ. தெக்காலே—அங்கேதான் இருக்கான் அந்தக் கட்டத்துரை.

சார்ஜன்ட் : விசயம்தான் தெரிஞ்சுதே, இன்னும் அந்தப் பையன் எதுக்கு?

தலைவன் : அவன் கூட இருக்கட்டும். இவள் பொய் சொல்லியிருந்தா, அந்த இடத்திலேயே அவனைச் சுட்டுத் தள்ளவேணும். என்ன குட்டி தெரிஞ்சுதா? சார்ஜன்ட், புறப்படு போகலாம். பணம் கிடைக்கும்னு பாத்தியா? அடி பயித்தியக்காரி.

[உரக்கச் சிரித்துக்கொண்டு வெளியே போகிறான். சார்ஜன்டும் அவனைப் பின் தொடர்கிறான்.]

## காட்சி மூன்று

[திரை விழுந்து மறுபடியும் விலகுகிறது. முன்பிருந்த அதே காட்சி தோன்றுகிறது.]

கிழவி : நல்லவேளை, மருதமுத்து உன்னிடம் கட்டபொம்மு ராஜா இருக்கிற இடத்தைச் சொல்லாதது நல்லதாச்சு.

தெய்வானை : சொல்லியிருந்தாலும் அந்த ராக்ஷதர்களுக்கு உண்மையைச் சொல்லுவேனா?

கிழவி : யார் கண்டா? என் மகன் மேலிருக்கிற ஆசையிலே......

தெய்வானை : போங்க அத்தை. இப்பகூட நான் உண்மையைச் சொல்லலையே? அத்தான் வடக்குப்பக்கம் சொன்னாரு. நான் தெக்கேன்னுதான் சொன்னேன்.

கிழவி: அந்தப் பொய்யினாலே என்னாகும்? நிஜம் சொன்னாலும் பொய் சொன்னாலும் எல்லாம் ஒண்ணு தான்.

தெய்வானை: சுட்டபொம்மு ராஜா தப்பித்துக் கொள்ளுவார்கள்.

கிழவி: அதைப் பொறுத்த வரையிலும் எனக்கு சந்தோஷந்தான்.

தெய்வானை: அத்தானை என்னமாவது செய்திடு வாங்களா?

கிழவி: அவனைப்பத்தித்தான் நான் சொல்றேன்! பொய் சொன்னாலும் நிஜம் சொன்னாலும் அவனைப் பொறுத்தமட்டிலே எல்லாம் ஒண்ணுதான். ஆனால், என் மகன் உயிர் போனாலும் நம்ம ராஜாவைக் காட்டிக் கொடுக்கமாட்டான்.

தெய்வானை (கவலையோடு): அத்தே, அத்தானுக்கு ஏதாவது ஆபத்து வருமா?

கிழவி: அவனைப்பத்தி இனிமே கவலைப்படக் கூடாது. நீ என்னைப்போலப் பெருமைப்பட வேணும்.

தெய்வானை: நீங்கள் சொல்றது எனக்குப் புரிய வில்லையே?

கிழவி: நேத்து வரையிலும் என் மகன் வெறும் ஆடு மேய்க்கிற பையன். இன்னைக்கு அவன் வீரன். அவன் இனிமே சிரஞ்சீவி.

தெய்வானை: அத்தே, ஓடைக்குப் போய்ப் பார்த் திதும் அந்த வெள்ளக்காரன் என்ன செய்வான்?

கிழவி: என்ன செய்வான்? இங்கே என்ன செய்ய நினைத்தானோ அதைத்தான் அங்கேயும் செய்வான்?

தெய்வானை : ஐயோ, அத்தே எனக்குப் பயமா இருக்குதே.

கிழவி : தெய்வானை, நீ விசனப்படாதே. கழுகு கையிலே சிக்கின குஞ்சு திரும்பிவராது. அந்தக் கும்பெனியான் வீட்டுக்குள்ளே வந்ததும் எனக்கு இது தெருஞ்சு போச்சு.

தெய்வானை (அழுது கொண்டே) : உங்களுக்குப் பெத்த வயிறு நோகல்லையா? அத்தே, எப்படி இப்படிப் பொறுமையோடு பேசறீங்க.

கிழவி : என் வயிறுந்தான் பற்றி எரிகிறது. என் நெஞ்சு வெடிச்சுப் போனாலும் போகும்...இந்தத் தள்ளாத வயசிலே எனக்கு இனி யாரு கதி? ஆனால் மருதமுத்துவை நான் மகனாகப் பெற்றது என்னுடைய தவப் பயன்தான். அந்த நினைப்பிலே நான் சந்தோஷமா இருப்பேன்.

தெய்வானை : அத்தே, என் ஆசை எல்லாம் போச்சா? இனிமேல் இந்த உலகிலே எனக்கு வாழ்வு இல்லையா? என் அத்தான் திரும்பி வரமாட்டாரா?

கிழவி : அவனைப்போல ஆயிரம் ஆயிரம் பேர் உயிர் கொடுத்தாத்தான் இந்த தேசம் மறுபடியும் நம்ம கைக்கு வரும். அதுக்கு நம்ம ராஜா கட்டபொம்மு இருக்கிறாரு. பயப்படாதே.

[துப்பாக்கி வெடிச் சத்தம் தூரத்திலே கேட்கிறது.]

தெய்வானை : ஐயோ அத்தான்......

[அலறித் துடித்து விழுகிறாள்.]

கிழவி : தெய்வானை, அழவேண்டாம். என் மகனை இன்று வரையிலும் நாலு பேருக்குத்தான் தெரியும்.

தாளையிலிருந்து அவனுடைய புகழ் நாடெல்லாம் தெரியும். தாய்மார் தொட்டிலாட்டும்போது அவன் புகழைப் பாடிக் குழந்தைகளை உறங்கவைப்பார்கள், அவன் சிரஞ்சீவியாகிவிட்டான்.

தெய்வானை (விம்மி): அத்தே, அத்தே நான் பொய் சொல்லியும் பயனில்லையா?

கிழவி: பொய்க்குப் பலனேது? ஆனால் என் மகன் உயிர் கொடுத்ததால் ஒரு பலன் ஏற்பட்டிருக்கிறது. அந்த வெடிச் சத்தம் கேட்டு கட்டபொம்மு ராஜா எச்சரிக்கையாகப் பதுங்கிக் கொள்ளுவார். அது போதும் எனக்கு...

[கிழவியின் முகத்திலே பெருமையும் வருத்தமும் கலந்து தோன்றுகின்றன. தெய்வானையின் கண்களிலிருந்து கண்ணீர் வடிகிறது.]

திரை

# தன்னைத் தெரியுமா?

மற்றவர்களுடைய குறைபாடுகள் நமக்கு விரைவிலே தெரிந்துவிடுகின்றன: அவர்களுடைய நல்ல பண்புகள்கூட அவ்வளவு விரைவிலேயே தெரிகிறதில்லை. ஆனால், ஒருவனுக்கு அவனுடைய சொந்தக் குறைபாடுகள், நல்ல பண்புகள் அவ்வளவு எளிதிலே புலனாகின்றனவா? நம்மை நாமே தெளிவாக அறிந்துகொள்கிறோமா? அதாவது மற்றவர்கள் நம்மை அறிந்துகொள்வதுபோல அவ்வளவு நன்றாக நம்மை நாமே அறிந்துகொள்கின்றோமா? இந்த நாடகம் இக்கேள்விக்கு விடையளிக்க ஒருவாறு முயல்கின்றது.

## நாடகத்தில் தோன்றுவோர்

சுப்பிரமணியம்
தாயார்
பெரிய மாமா
சின்ன மாமா
முனியன்

# தன்னைத் தெரியுமா?

காட்சி ஒன்று

[வீட்டின் உட்புறத்திலே ஒரு விசாலமான அறை. பக்கத்திலே ஒரு மேஜை இருக்கிறது. அதன் மேலே நிறையப் புத்தகங்களும் காகிதங்களும் கிடக்கின்றன. ஒரு பக்கத்திலே வெளியே செல்லும் கதவு தெரிகிறது. நாற்காலியிலே சுப்பிரமணியம் அமர்ந்திருக்கிறான். அவனுக்கு வயது இருபத்து நான்கு இருக்கும். அவன் தாயார் அருகிலே நின்றுகொண்டிருக்கிறாள். விதவை. அவளுக்கு வயது 42. திரை மேலெழுகின்றபோது சுப்பிரமணியம் பேசிக்கொண்டே நாற்காலியை விட்டு எழுந்து தாயாரிடம் வருகிறான்.]

சுப்பிரமணியம்: அம்மா, எனக்கு வாழ்க்கையே வெறுத்துப் போச்சு. நீ ஒருத்தி மட்டும் இல்லாவிட்டால் பேசாமல் காவி தரித்துக்கொண்டு சந்நியாசியாகப் போயிடுவேன்.

தாயார்: இப்போ என்ன முழுகிப் போச்சு—எதுக்கு நீ இப்படி வருத்தப்படுகிறாய்?

சுப்பிரமணியம்: வருத்தப்படாமல் சந்தோஷப்படச் சொல்லுகிறாயா?—உனக்கு ரண்டு பேர் அண்ணனும் தம்பியும் இருக்கிறார்களே—உலகத்திலே எல்லோரும் அப்படியிருந்தால் நாமெல்லாம் பிழைத்த மாதிரிதான்...

தாயார்: பெரிய மாமாவிடம் போனாயே அவர் என்ன சொன்னார்?...

சுப்பிரமணியம் (வெறுப்போடு) : அந்த லோபி என்ன சொல்லுவார்? அவர் குணத்துக்குத் தக்கமாதிரிதான் சொல்லுவார்—அதைக் கேட்கவேணுமா என்ன?

தாயார் : என்னதான் நடந்தது சொல்லேன்...?

சுப்பிரமணியம் : என்னத்தைச் சொல்றதம்மா...உன் அண்ணன் லட்சணத்தை?—இப்படித்தான் அன்றைக்கு உன் தம்பியிடம் போனேன். ருக்மணியை எனக்குக் கலியாணம் பண்ணிக்கொடுக்க வேணுமென்று கெஞ்சிக் கெஞ்சிக் கேட்டேன். ஒரே பேச்சாக முடியாதுன்னு சொல்லிவிட்டார்.

தாயார் : அவன் கொடுக்காவிட்டால் வேறே பெண்ணே கிடையாதா? எதுக்கு அதையே நினைச்சு மனசை அலட்டிக் கொள்ளுகிறாய்?

சுப்பிரமணியம் (விசனத்தோடு) : அம்மா, ருக்மணியைக் கலியாணம் பண்ணிக்க வேணும்னு நான் எத்தனை ஆசையாயிருக்கிறேன் என்கிறது உனக்குத் தெரியாதா? அவளும் என்னையேதான் பண்ணிக்கொள்ள ஆசைப் படுகிறாள்—சின்ன மாமாதான் முடியாதென்று குறுக்கே நிற்கிறார்.

தாயார் : ஆமாம், நீ ஏதாவது உத்தியோகம் பண்ணி சம்பாதித்தால்தானே பெண்ணைக் கொடுப்பான்? வரும்படிக்கு வகையில்லாதபோது யாரா இருந்தாலும் பெண் கொடுக்கச் சம்மதிப்பார்களா?

சுப்பிரமணியம் : சம்பாதிக்காவிட்டால் — அதற்காக என்மேல் அவர் அப்படிச் சீறி விழவேணுமா? சின்ன மாமா அன்றைக்கு என்னை எப்படியெல்லாம் பேசினார் தெரியுமா?

[விசனத்தோடு நாற்காலியில் அமர்கிறான். இடது கரத்தை மேஜையில் ஊன்றிக் கன்னத்தில் கையைப் பதிக்கிறான்.]

தாயார் : அவன்தான் முன்கோபக்காரனென்று தெரியுமே? — அவன் என்றைக்கும் அப்படித்தான். யாரிடத்திலும் திடீர் திடீரென்று கோபித்துக்கொள்ளு வான்—அது தெரிந்த விஷயந்தானே?

சுப்பிரமணியம் : அப்பா உயிரோடிருந்தால் அவர் இப்படிப் பேசுவாரா?

தாயார் : ஆமாம், அப்பா இருந்தால் பதிலுக்குப் பதில் கடக்கடக் கொடுப்பார்—இப்போது அதை நினைத்து என்ன பண்றது?

சுப்பிரமணியம் : அப்பா இருந்தால் பேசாமல் சின்ன மாமா ருக்மணியை எனக்குக் கொடுத்திருப்பார். எந்த விதமான ஆட்சேபமும் சொல்ல அவருக்குத் தைரியம் வராது.

தாயார் : அப்பா உத்தியோகம் பண்ணினார்—சம்பா தித்தார்—குடும்பத்தைத் தாராளமாக நடத்தி வந்தார். நீயும் அப்படிப் பண்ணினால் நிச்சயமா ருக்மணியை மாமா கொடுப்பான்.

சுப்பிரமணியம் (சற்று கோபத்தோடு) : அம்மா, நீ எப்போப் பாத்தாலும் உத்தியோகம் உத்தியோகம்னு சொல்லிக்கொண்டே இருக்கிறாய்—வெறும் பீ.ஏ. படித்த வனுக்கு இந்தக் காலத்தில் என்ன உத்தியோகம் கிடைக் கிறது? நானும் அலைந்து பார்த்துவிட்டுத்தான் விட்டு விட்டேன். அது உனக்குத் தெரியாதா என்ன?

தாயார் : உத்தியோகம் கிடைக்காத போனாலும் என்னமாவது செய்யத்தானே வேணும்? சும்மாவே இருந்தால் கையில் இருக்கிற பொருளும் போய்விடும். பிறகு என்ன செய்வது?

சுப்பிரமணியம் : அதை நினைத்துத்தான் ஏதாவது வியாபாரம் செய்யத் தீர்மானம் பண்ணினேன். என் சிநேகிதன் ஒருத்தன் கைத்தறி நெசவுத் துணி வியாபாரம் செய்கிறான். இன்னும் கொஞ்சம் முதல் போட்டு செய்தால் நல்ல லாபம் கிடைக்குமென்று சொல்லி என்னைக் கூட்டுச் சேரச் சொன்னான்.

தாயார் : எவ்வளவு முதல் போடணும்?

சுப்பிரமணியம் : என் பங்குக்கு ஐயாயிரம் போட வேணுமாம். அவனும் ஐயாயிரம் போட்டிருக்கிறான்.

தாயார் : ஐயாயிரமா? அத்தனை பணத்துக்கு எங்கே போவது?

சுப்பிரமணியம் : அதற்காகத்தான் உன் அண்ணா இருக்கிறாரே—பெரிய மாமா—அவரிடம் ஓடினேன்—நான் ஒன்றும் யாசகம் கேட்கவில்லை—கடனாகத்தான் கேட்டேன். ஒரு வருஷத்தில் திருப்பிக் கொடுக்கிறதாக சொன்னேன்.

தாயார் : அவர் என்ன சொன்னார்? கொடுக்க மாட்டேனென்று சொல்லிவிட்டாரா?

சுப்பிரமணியம் (வெறுப்போடு) : இல்லையில்லை—உடனே தூக்கிக் கொடுத்துவிட்டார்—அதுதான் எனக்கு இவ்வளவு சந்தோஷம். போயும் போயும் பகவான் அவருக்குப் பணத்தைக் கொடுத்தாரே—அவரைச் சொல்லவேணும்.

தாயார் : என்னிடம் இதை நீ முன்னாலேயே சொல்லக்கூடாதா?—நான் போய்க் கேட்டுப் பார்க்கிறேன்... கொடுத்தாலும் கொடுப்பார்—நான் கேட்டால் இல்லையென்று சொல்லமாட்டார்.

சுப்பிரமணியம் (வெறுப்போடு): ஆமாம்—கொடுப்பார்—நீயும் வாங்கி வருவாய்—அந்த லோபியிடம் ஒரு செல்லாக் காசுகூட வாங்க முடியாது. இனி நீ போய் வாங்கி வந்தாலும் அந்தப் பணம் எனக்கு வேண்டாம்.

தாயார்: இப்படிக்கோபப்பட்டால்காரியம் ஆகுமா?

சுப்பிரமணியம்: ஆகாவிட்டால் போகிறது—அவரிடம் வாங்கி வியாபாரம் பண்ணிஞல்கூட உருப்படியாகாது. அந்த வியாபாரமே வேண்டாம்.

தாயார்: பின்னே என்னதான் செய்யப் போகிருய்? சும்மா இருக்க முடியுமா?

சுப்பிரமணியம் (உற்சாகத்தோடு): அந்த நாவல் எழுதினேனல்லவா?—அது அநேகமாக முடிஞ்சு போச்சு. அதைக் கொஞ்சம் மெருகு கொடுத்து வெளியிடப் போகிறேன்.

தாயார்: ஆமான்டப்பா, அதுதான் உனக்கு சோறு போடும். கதை எழுதி யாராவது ஜீவனம் பண்ண முடியுமா? கையிலிருக்கிற காசையும் அச்சாபீஸ்காரனுக்குக் கொடுத்துட்டுத் திண்டாட வேண்டியதுதான்...

சுப்பிரமணியம்: அம்மா, என்னுடைய நாவலை அப்படிக் கேவலமாக நினைக்க வேண்டாம். அப்படியே உணர்ச்சிகளெல்லாம் பொங்கும்படி எழுதியிருக்கிறேன்.

தாயார்: நீ என்ன எழுதினாலும் சரி, இந்த நாட்டிலே கதை எழுதிப் பிழைக்க முடியாது. அதைத் தான் நான் சொல்லுகிறேன்.

சுப்பிரமணியம்: ஏன் பிழைக்க முடியாது? நல்ல நாவல் எழுதிஞல் நிச்சயம் பணம் கிடைக்கும்.

நாயார் : இந்தக் காலத்திலே எத்தனையோ பேர் நல்ல நாவல் எழுதுகிறார்கள்—ஆனால் அவர்களிலே ஒருத்தராவது அதைக்கொண்டே வாழ்க்கை நடத்துகிறாரா? இல்லவே இல்லை. வேறே ஏதாவது உத்தியோகம் செய்துதான் பிழைக்கிறார்கள்.

சுப்பிரமணியம் : அம்மா, ஆரம்பிக்கிறபோதே நீ இப்படி என் உற்சாகத்தையெல்லாம் போக்கடிக்கப் படாது—இலக்கிய கர்த்தாவாக வருவது சாமான்யமான காரியமில்லை. எல்லோருக்கும் அந்த பாக்கியம் கிடைக்காது.

நாயார் : நான் இலக்கிய கர்த்தாவாக ஆகிறதைக் குறைவாகச் சொல்லவில்லை—ஆனால் முதலிலே சோற்றுக்கு ஏதாவது வழி கண்டுபிடித்துக்கொள் என்றுதான் சொல்கிறேன்.

சுப்பிரமணியம் : மேல் நாட்டிலெல்லாம் நாவல் எழுதுகிறவர்களுக்கு நிறையப் பணம் கிடைக்கிறது. ரஷ்யாவிலேகூட அப்படித்தானும். ஆசிரியர்களுக்குத்தான் அங்கெல்லாம் நல்ல வரும்படி.

நாயார் : அங்கிருந்தால் நமக்காகுமா? நீ இங்கிலாந்திலே பிறக்கவில்லையே? — இங்கிருக்கிற நிலைமையை எண்ணாமல் நீ என்னமோ மனக்கோட்டை கட்டிக்கொண்டிருக்கிறாய்......

சுப்பிரமணியம் : இங்கேயும் ஒரு காலத்தில் எழுத்தாளர்களுக்கு நல்ல அதிர்ஷ்டம் வரும்......

நாயார் : அந்தக் காலம் நாளைக்கு வரப்போகிறதில்லை. நீ நாளைக்கு நடக்கிற காரியத்தைப் பேசு.

சுப்பிரமணியம் : அம்மா, நீ என்ன சொன்னாலும் நான் அந்த நாவலை அச்சிட்டு வெளியிடாமல் இருக்கப் போகிறதில்லை.

**தாயார் :** சரி சுப்பு—உன்னிஷ்டம் போலப் பண்ணு—கூடவே வேலை தேடுவதையும் விட்டுவிடாதே—அதுதான் நான் உன்னைக் கேட்டுக்கொள்வது.

**சுப்பிரமணியம் :** ஆகட்டுமம்மா — வேலை வேலையென்று சும்மா தொல்லைப்படுத்தாதே—அதுவுங் கிடைத்தால் நான் வேண்டாமென்று சொல்லுகிறேன்......?

**தாயார் :** ருக்மணியைப் பண்ணிக்க வேணுமென்று இருந்தால் சீக்கிரமாகப் பணஞ் சம்பாதிக்கிற வழியைப் பாரு—இல்லாவிட்டால் சின்ன மாமா கொடுக்கச் சம்மதிக்கவே மாட்டான்.

**சுப்பிரமணியம் :** அவர் எனக்குக் கொடுக்காமல் எங்கேதான் பண்ணிவிடுவாரோ பார்க்கிறேன்.

**தாயார் :** சுப்பிரமணியம், நீ அந்த சிடுமூஞ்சியிடம் நேரிலே இப்படிப் பந்தயம் போட்டுவிடாதே—பிறகு காரியம் கெட்டே போகும்......

## காட்சி இரண்டு

[அதே வீட்டின் முன்புறம், தாழ்வாரத் திண்ணையிலே சுப்பிரமணியத்தின் தாயார் நின்றுகொண்டிருக்கிறாள். வாசலிலே வேலைக்கார முனியன் நிற்கிறான். முனியனைப் பார்த்துக்கொண்டே அவள் தாழ்வாரத்திலிருந்து கீழிறங்கி வருகிறாள். மாலை நேரம்.]

**தாயார் :** ஏண்டாப்பா, நீ யாரு?

**முனியன் :** நம்ம ஐயா இல்லீங்க?—உங்களுக்கு மூத்தவரு—உங்க அண்ணு வீட்டிலே வேலைக்காரனுங்க.

**தாயார் :** உன் பேரென்ன?

**முனியன் :** முனியனுங்க.

நாயார் : போன மாசத்திலே வேறொருத்தன் இருந் தான் ? நீ இப்போ புதிசா ?

முனியன் : அவன் நின்று போய்ட்டானம்மா. ஐயா சம்பளங் கொடுக்கிறதுன்னுப் பெரிய கஸ்டமுங்க. கொடுக்கிற சம்பளத்தையும் அரை ரூவா கால் ரூவாயாப் பிச்சுப் பிச்சுத்தான் கொடுப்பாரு. நானும் வேறிடம் பார்த்துக்கிட்டு இருக்கிறேன்...

நாயார் : இப்போ எங்கே வந்தாய் ?

முனியன் : நம்ம குழந்தை—சின்ன ஐயாவை அங்கே அவசரமாகக் கூட்டிவரச் சொன்னாரு.

நாயார் (திடுக்கிட்டு) : நம்ம சுப்பிரமணியத்தையா? எதுக்கு ?

முனியன் : அதெல்லாம் எனக்கென்னம்மா தெரி யும் ? சுருக்காப் போய்க் கையோடே இட்டுண்டு வான் னுரு—ஓடியாந்தேன்.

நாயார் (கவலையோடு) : கோபமா இருக்காரா?— அல்லது சந்தோஷமா இருக்காரா ?

முனியன் : அவர் பேச்சைக் கேட்டா எனக்கு எப்பவுமே பயமாத்தான் இருக்குதம்மா. அவரைப் பார்த்தா எனக்குப் புலியைக் கண்டாப்புடி.

நாயார் (கவலையோடு) : ஏண்டாப்பா, ஐயா அதுக் குள்ளே ஆபீசிலே யிருந்து வந்துவிட்டாரா ? அதுக் குள்ளே வரமாட்டாரே ?

முனியன் : அம்மா, இன்னிக்கு ஐயா காலையிலிருந்து ஆபீசுக்கே போகவில்லே—ஏதோ புஸ்தகத்தை படிச்சுக் கிட்டே இருக்காரு—சாப்பிடக்கூட இல்லே...

தாயார் : டேய் சுப்பு, எங்கேடா இருக்கிறாய் ?

[உரத்துக் கூப்பிடுகிறாள்.]

சுப்பிரமணியம் : ஏம்மா, இதோ வந்துவிட்டேன்.

[உள்ளேயிருந்து சுப்பிரமணியத்தின் குரல் கேட்கிறது. அதைத் தொடர்ந்து அவனும் வெளியே வருகிறான்.]

தாயார் : சுப்பு, நீ புஸ்தகம் எழுதி இப்படி விபரீதமாக முடிந்ததே...? பெரிய மாமாக்வுகு எதுக்கடா அந்த நாவலை அனுப்பினாய் ?

சுப்பிரமணியம் : அவருக்கு அனுப்பவேண்டுமென்று தானே நாவலை அச்சிட்டு வெளியிட்டேன்? சின்ன மாமாவுக்கும் ஒரு பிரதி அனுப்பியிருக்கிறேன்.

தாயார் (மேலும் கவலையோடு) : அவனுக்கும் அனுப்பியிருக்கிறாயா? இரண்டு பேரும் சேர்ந்தால் என்ன ஆகுமோ ? (முனியன் பக்கம் திரும்பி) ஏப்பா முனியா, ஐயா தனியாக இருக்கிறாரா? அல்லது அவருடைய தம்பியும் கூட இருக்கிறாரா ?

முனியன் : ஐயா, தம்பிதான் அங்கே வாரதே இல்லையம்மா. ரண்டு பேருக்கும் என்னமோ ரொம்ப மனஸ்தாபம்—பேச்சு வார்த்தைகூட அவ்வளவாக இல்லையாம்.

சுப்பிரமணியம் : நீ யாரப்பா ?

தாயார் : அவன்தான் முனியன்; பெரிய மாமா வீட்டு வேலைக்காரன், மாமா உன்னை இப்பவே கூட்டி வரச் சொன்னாராம். உன்னுடைய நாவலைத்தான் காலையிலிருந்து சாப்பிடக்கூடப் போகாமல் படித்துக் கொண்டே இருக்கிறாராம்.

சுப்பிரமணியம் : அப்படியா ? எனக்கு அளவில்லாத சந்தோஷம். முனியா, நீ முன்னாலே போ—பின்னாலேயே நான் சைக்கிளில் வருகிறேன் என்று சொல்.

முனியன் : நல்லதையா.

[போகிறான்.]

தாயார் : சுப்பு, இப்போ என்னடா செய்கிறது ?

சுப்பிரமணியம் : என்ன செய்கிறது? நான் போய்ப் பெரிய மாமாவைப் பார்த்துவிட்டு வருகிறேன்.

தாயார் : நீ என்னமோ இளங்கன்று பயமறியாது பேசுகிறாய்—எனக்கு ஒரே கவலையாய் இருக்கிறது.

சுப்பிரமணியம் : அம்மா, நான் எழுதின நாவலைப் படித்தாயா?

தாயார் : இப்பத்தான் படித்து முடித்தேன்......அது தான் கவலையாக இருக்கிறது.

சுப்பிரமணியம் : உனக்கு அந்த நாவல் பிடித்த தாம்மா?—உன் மனசிலிருக்கிறதை ஒளிக்காமல் சொல்லு —உன் மகன் எழுத்தாளனாக முன்னுக்கு வர முடியுமா என்பது இந்த முதல் முயற்சியிலேயே தெரியவேணும்...

தாயார் : சுப்பு, உனக்கு இருந்தாலும் இத்தனை விஷமம் ஆகாது—எழுதத் தொடங்குகிறபோதே இப்படி ஆரம்பித்துவிட்டாயே ?

சுப்பிரமணியம் : என்னம்மா ? என் மேலே என்னமோ பெரிய கேஸ் கொண்டுவரப் பார்க்கிறாயே?

தாயார் : ஆமாம், பெரிய கேஸ்தான். உன் மாமா ரண்டுபேரும் இந்த நாவலைப் படித்ததும் உடனே அவர் களுக்கு விஷயம் விளங்காமலா போகும் ? நீ அவர்கள் ரண்டு பேரையுந்தானே அப்படி எழுதியிருக்கிறாய் ?

சுப்பிரமணியம் (சிரித்துக்கொண்டே): அவர்களைப் பற்றி நான் என்ன எழுதியிருக்கிறேன் ?

தாயார் : சுப்பு, என்னிடத்திலேயே மறைக்கப் பார்க்கிருயா? ரொம்பவும் பிசுனாரியாக—சுத்த உலுத்தன் என்று ஒருத்தனை எழுதியிருக்கிருயே—அந்த உலோப காந்தன்—அவனையும், அந்த சிடுமூஞ்சிப் பேர்வழி—அகோரமூர்த்தி—அவனையும் யாரென்று எனக்குத் தெரியாதா என்ன?

சுப்பிரமணியம் : அவர்கள் இரண்டு பேரும் என்னுடைய நாவலிலே இரண்டு பாத்திரங்கள்—அவர்களைப் பற்றி இப்பொழுதென்ன...?

தாயார் : யாரைக் கேலிபண்ணி அப்படி இரண்டு பேரை சிருஷ்டி பண்ணி இருக்கிருய் என்பது எனக்குத் தெரியும்—என் கூடப் பிறந்தவர்களை என்ன இருந்தாலும் நீ இப்படிப் படம் பிடித்து எல்லாருக்கும் காட்டப்படாது.

சுப்பிரமணியம் : என்னம்மா, திரும்பத் திரும்ப அப்படியே பேசுகிருய்? நான் யாரையும்...

தாயார் : சுப்பிரமணியா, சும்மா மறைக்கப் பார்க்காதே—உலோபகாந்தன்தான் பெரிய மாமா—அகோரமூர்த்திதான் சின்ன மாமா—அவர்கள் ரண்டு பேருடைய தன்மையும் போக்கும் அப்படியே தத்ரூபமாகத் தெரிகிறதே? அவர்களையே பாத்திரங்களாக வைத்து நாவல் எழுதியிருக்கிருய் ?

சுப்பிரமணியம் (சிரித்துக்கொண்டே) : அவ்வளவு நன்ருகத் தெரிகிறதா? அப்போ எனக்குத் திருப்திதான்—அந்த மட்டுமாவது எழுதுகிறதுக்கு எனக்குத் திறமை இருக்கிறதே...

தாயார் : அவர்கள் நமக்கு எந்த வகையிலும் உபகாரம் செய்யாமல் போனுலும் நீ அவர்களை இப்படி கேலி பண்ணி எழுதியிருக்கக்கூடாது. இது நல்லதல்ல.

சுப்பிரமணியம் : ஏன் எழுதக்கூடாது? நன்றாக எழுத வேணும்—அவர்களுடைய குணத்தைத் வெளியில் காண்பிக்க வேணுமென்றுதான் இந்த நாவலையே எழுதினேன்...

தாயார் : நீ சிறு பிள்ளை—உனக்கு உலகமே தெரியாது—இப்படியெல்லாம் எழுதினால் கடைசியிலே நமக்குத்தான் கஷ்டம் வந்து சேரும்—அவர்கள் எல்லாம் பணக்காரர்கள்—நாலு பேர் அவர்கள் பக்கம்தான் சேருவார்கள்...

சுப்பிரமணியம் : சேர்ந்தால் சேரட்டுமே—எனக்கு அதைப்பற்றிக் கவலையில்லை...

தாயார் : என்ன கப்பு, இப்படித் துடுக்குத்தனமாகப் பேசுகிறாய்...?—நாலு பேருடைய தயவில்லாமல் நீ எப்படி வாழ்க்கை நடத்துவாய்?—உன் மாமா இரண்டு பேரும் நினைத்தால் என்ன வேணுமானாலும் பண்ண முடியும்...

சுப்பிரமணியம் : அவர்கள் என்னை என்ன செய்ய முடியும்?—அவர்கள் தயவு எனக்கு வேண்டியதில்லை.

தாயார் : உபகாரம் பண்ணாமல் இருந்தாலும் பரவாயில்லை. நீ இப்படி எழுதியிருக்கிறதைக் கண்டு என்ன வாகிலும் உனக்குத் தொந்தரவு கொடுப்பார்கள்—இப்பக்கூடப் பெரிய மாமா கூப்பிட்டிருக்கிறதை நினைத்தால் எனக்குப் பயமாக இருக்கிறது.

சுப்பிரமணியம் : அம்மா, நீ வீணாகக் கவலைப்பட்டுக் கொள்ளாதே...பெரிய மாமா என்னை விழுங்கிவிட மாட்டார். நான் போய் அவரைப் பார்த்து வருகிறேன்.

தாயார் : நேரில் போய் வாய்க்கு வந்தபடி பேசி விடாதே—சாந்தமாகப் பேசி சமாதானம் செய்துவிட்டு வா...

சுப்பிரமணியம் : சமாதானமா? அவருடைய மனதைக் கொந்தளிக்க வேண்டுமானால் செய்து வருகிறேன்— ஆனால் நீ மட்டும் கவலைப்படாதே.

காட்சி மூன்று

[மாலையிலே இருள் கூடுகின்ற நேரம். சுப்பிரமணியத்தினுடைய பெரிய மாமாவின் இல்லத்தில் ஒரு விசாலமான அறை தோற்றமளிக்கிறது. பெரிய மாமா சாய்வு நாற்காலியில் அமர்ந்திருக்கிறார். அவருக்கு வயது 50 இருக்கும். சுப்பிரமணியம் சற்று தூரத்திலே நிற்கிறான்.]

பெரிய மாமா : ஏண்டா சுப்பிரமணியம், நீயா அந்த நாவலை எழுதினாய்?

சுப்பிரமணியம் (கொஞ்சம் பயந்த குரலில் மெதுவாக): ஆமாம் மாமா—என்னமோ எழுதினேன்.

பெரிய மாமா : படுசுட்டியாக இருக்கிறாயே—இதெல்லாம் எங்கே கற்றுக்கொண்டாய்?

சுப்பிரமணியம் : சும்மா பொழுது போகவில்லை—சரி, கதையாவது எழுதலாம் என்று ஆரம்பித்தேன்; அவ்வளவுதான்.

பெரிய மாமா : நீ யாரைப்பற்றி எழுதியிருக்கிறாய் என்று எனக்குத் தெரியாதா என்ன?

சுப்பிரமணியம் (இழுத்தாற்போல்) : யாரைப்பற்றியும் எழுதவில்லையே?—கற்பனையாகக் கதை எழுதினேன்..

பெரிய மாமா (உரத்த குரலில் உற்சாகமாக) : டேய், என்னிடமா மறைக்கப் பார்க்கிறாய்? அது பலிக்கவே பலிக்காது. நான் யாரென்று உனக்குத் தெரியுமோ இல்லையோ...? வரண்ட மரத்திலே நார் உரித்து விஷயத்தைத் தெரிந்து விடுவேன்...

சுப்பிரமணியம் : மறைக்கிறதுக்கு ஒன்றுமில்லையே மாமா?—எனக்குத் தோன்றினமாதிரி எழுதினேன்...இது தான் முதல் நாவல்...

பெரிய மாமா : முதல் நாவலிலேயே சரியான போடு போட்டிருக்கிறாய்—அந்த அகோரமூர்த்தி அற்புதமான சிருஷ்டியடா—உன் சின்ன மாமா சாட்சாத் அகோர மூர்த்தியாக அப்படியே காட்சியளிக்கிறான்—பலே பேஷ்...

சுப்பிரமணியம் (தயக்கத்தோடு) : நான் யாரையும் நினைத்து எழுதவில்லை...என்னமோ...

பெரிய மாமா : போடா போ—என்னிடம் சொல்வதற்கு எதுக்கடா பயம்? அப்படித்தான் எழுதவேணும். அவனுடைய சிடுமூஞ்சிக் கோபமெல்லாம் தத்ரூபமாக கதையிலே வந்திருக்கிறது—எனக்கு ரொம்பப் பிடிச்சுது... வாடா, இப்படி நாற்காலியிலே உட்காரு...

[சுப்பிரமணியம் மெதுவாக நாற்காலியில் உட்காருகிறான்.]

சுப்பிரமணியம் : மாமா—என்மேலே உங்களுக்குக் கோபமில்லையே...?

பெரிய மாமா : எதுக்கடா கோபம்?—நீ எழுதின நாவலைப் படித்ததிலேயிருந்து உன்மேல் எனக்கு ஒரே ஆனந்தமாக இருக்கிறது.

சுப்பிரமணியம் (இன்னும் சந்தேகத்தோடு) : நீங்க நாவல் முழுவதையும் நன்றாகப் படித்தீர்களா?

பெரிய மாமா: ஒரு தரத்துக்கு மூணுதரம் படித்தேன்—இன்றைக்கு ஆபீசுக்குக்கூடப் போகவில்லை—எனக்கு அந்த அகோரமூர்த்தி என்கிற பாத்திரந்தான் ரொம்பப் பிடித்தது. வாழ்க்கையிலே நேராகக் கண்டதை வைத்து அதை எழுதிருக்கிறாய்—அதுதான் இந்த நாவலிலேயே ஜீவனாக இருக்கிறது. ரொம்ப பிரமாதம்...

சுப்பிரமணியம்: நாவல் உங்களுக்குப் பிடித்ததென்று கேட்க எனக்கு ஒரே திருப்தி—வேறே ஒன்றும் குற்றமில்லையே...?

பெரிய மாமா: சுப்பு, இந்த நாவல் ஒண்ணு நெம்பர். இப்படியே இனிமேல் எழுதுவதையும் நன்றாகச் செய்ய வேணும்—உன் சின்ன மாமாவுக்கு இப்படி நல்ல சூடு கொடுத்தே எழுதவேணும்—அவன் ருக்மணியை உனக்குக் கொடுக்கிறானா இல்லையா?

சுப்பிரமணியம்: முடியவே முடியாது என்கிறார்—நானும் பலதடவை கேட்டுப் பார்த்துவிட்டேன்...

பெரிய மாமா: அவன் கிடக்கிறான் முன்கோபி—அந்தப் பெண்ணில்லாவிட்டால் வேறு கிடையாதா என்ன?...ம்...சுப்பு, நீ என்னமோ வியாபாரம் பண்ண வேணுமென்று சொன்னாயே...?

சுப்பிரமணியம்: ஆமாம் மாமா—என் சிநேகிதன் ஒருத்தனோடு கூட்டாக வியாபாரம் செய்யலாமென்று நினைத்தேன்...

பெரிய மாமா: ஆமாம்—அதற்கு முதல் வேணுமென்று ஒரு நாள் கேட்டாய்—அப்புறம் அதைப்பற்றி என்னிடம் ஒன்னுமே சொல்லவில்லையே?—எத்தனை பணம் வேணும்?

சுப்பிரமணியம் : என் பங்குக்கு ஐயாயிரம் போட வேணும்...

பெரிய மாமா : ஐயாயிரந்தானு பிரமாதம்?—இன் னைக்கே வாங்கிக்கொண்டு போ...ஐயாயிரம் போதுமா?

சுப்பிரமணியம் : போதும் மாமா—அடுத்த வருஷத்தி லேயே திருப்பிக் கொடுத்துவிடுகிறேன்...

பெரிய மாமா : அதுக்கொன்றும் அவசரமில்லை— மெல்லக் கொடுத்தால் போதும்—வியாபாரம் பண்ணி நீ முன்னுக்கு வரவேண்டுமென்கிறதுதான் எனக்கு ஆசை. இதோ பணம் கொண்டு வருகிறேன்.

[பெரிய மாமா எழுந்து சாவியை எடுத்துக் கொண்டு போகிறார். சுப்பிரமணியம் ஆச்சரியத் தோடு உட்கார்ந்திருக்கிறான்.]

## காட்சி நான்கு

[சுப்பிரமணியத்தின் வீட்டில் முன்னால் கண்ட அதே அறை. இரவு சுமார் எட்டு மணி]

தாயார் : சுப்பு—வந்துவிட்டாயா?...எனக்கு ஒரே கவலையாக இருந்தது—பெரிய மாமா ஏதாவது கோபித்துக்கொண்டாரா என்ன?

சுப்பிரமணியம் (குதூகலமாக) : அம்மா, இதோ பார்—இந்த நோட்டையெல்லாம் பார்த்தாயா?...

தாயார் : ஏதடா இத்தனை ரூபாய் உனக்கு?

சுப்பிரமணியம் : பெரிய மாமாதான் கொடுத்தார்— நான் வியாபாரம் பண்ணுவதற்கு ஐயாயிரம் கேட்டேனே இல்லையோ? அதுதான் கொடுத்தார்...

தாயார் : அப்போ அவர் உன்னிடம் கோபித்துக் கொள்ளவில்லையா ? நீ எழுதின நாவலைப் படித்தாரோ இல்லையோ...?

சுப்பிரமணியம் : நாவலைப் படித்துவிட்டுத்தான் இத்தனை தாராளமாகக் கொடுத்தார். இல்லாவிட்டால் அந்த உலோபி கொடுப்பாரா...

தாயார் : என்னது ? ஆச்சரியமாக இருக்கிறதே ? —சுப்பு, நீ என்ன தமாஷ் பண்ணுகிறாயா என்ன ?

சுப்பிரமணியம் : தமாஷ் ஒன்னும் இல்லையம்மா ? —பெரிய மாமாவுக்கு நான் சின்ன மாமாவைப் பற்றி எழுதினது ரொம்பப் பிடித்துவிட்டது—அதற்குத்தான் இந்த உபகாரம் பண்ணினார்.

தாயார் : அவரைப் பற்றியே எழுதியிருக்கிறாயே... அதைப்பற்றி அவர் வருத்தப்பட்டுக்கொள்ளவில்லையா ?

சுப்பிரமணியம் : அது அவருக்குத் தெரிந்தால் தானே ? அகோரமூர்த்தி என்கிற பாத்திரம் ஒன்றைத் தான் நான் வாழ்க்கையிலே இருந்து எடுத்திருக்கிறதாக அவர் நினைத்துக் கொண்டிருக்கிறார்.

தாயார் : அந்த லோபகாந்தனை அவர் தெரிந்து கொள்ளவில்லையா ?

சுப்பிரமணியம் : கொஞ்சங்கூட அவருக்குத் தெரிய வில்லை—அவரவருடைய குணமும் தன்மையும் ஒருத்த ருக்கும் தெரியாது போலிருக்கிறது—மற்றவர்களுக்குத் தெரிகிற மாதிரி அவரவர்களுக்கே தெரியாதென்று தோன்றுகிறது ..

தாயார் : அவருக்குத் தெரியாமல் போனாலும் உன் சின்ன மாமா நிச்சயமாகக் கண்டுபிடித்துவிடுவான்...அது தான் எனக்குப் பயமாக இருக்கிறது...

சுப்பிரமணியம் : அம்மா—அதோ சின்ன மாமாவே வருகிறார்—அவரும் என்னமோ அவசரமாகத்தான்...

[சின்ன மாமா நுழைகிறார். அவருக்கு வயது 35 இருக்கும்.]

தாயார் : வாடாப்பா...ஏது இன்றைக்கு அத்தி பூத்தாப்போல இந்தப் பக்கம் வந்துவிட்டாய்...?

சின்ன மாமா : எல்லாம் உன் மகன் வேலைதான்—அவன் ஒரு நாவல் எழுதியிருக்கிறான்—நீ படித்தாயோ இல்லையோ?...

தாயார் (கலக்கத்தோடு) : என்னமோ, சிறுபிள்ளை எழுதியிருக்கிறான்—அதைப்பற்றி என்ன?

சின்ன மாமா : சிறு பிள்ளை என்றாலும் ரொம்ப ஜோராக எழுதியிருக்கிறான்—அக்கா, சுப்பிரமணியத்துக்கு மனிதர்களை நன்றாகக் கவனித்து அறிந்து கொள்ளுகிற சக்தியிருக்கிறது...

தாயார் : தம்பி—நீ என்னவாவது கோபித்துக் கொள்ளப்படாது—உன் பிள்ளை மாதிரி அவனைப் பார்த்துக் கொள்...

சின்ன மாமா : கோபமா?—எதுக்குக் கோபம்?...?—அவன் அந்த லோபகாந்தனை சிருஷ்டி பண்ணி யிருக்கிறானே...அதுக்காக நான் அவனுக்கு என்ன வேணுமென்றாலும் பண்ணத் தயார்—ஏண்டா சுப்பு, ஏன் வீட்டுப் பக்கமே எட்டிப் பார்க்கிறதில்லை?—ருக்மணி ருக்மணி என்று திரிவாயே—அவளைக்கூட மறந்து விட்டாயா என்ன?

சுப்பிரமணியம் : மறக்கவில்லை மாமா—நாவல் எழுதுகிற வேலை கொஞ்சம் இருந்தது...

சின்ன மாமா: சரி சரி—பெரிய மாமாவைப் போட்டோ பிடித்து வைக்கிறதுக்கு நேரமெல்லாம் போய் விட்டதாக்கும்?!......இனிமேலாவது வருவாயோ இல்லையோ?...

சுப்பிரமணியம்: உங்க வீட்டுக்கு வராமல் வேறே நானெங்கே போவேன்...?

சின்ன மாமா: அப்படிச் சொல்லு — அதுதான் எனக்குத் திருப்தி—அக்கா, கலியாணத்தை இந்த மாசத்திலேயே வைத்துவிடலாமா?

நாயார்: உன் இஷ்டம். நீ சொன்னால் அப்படியே செய்யலாம்.

சின்ன மாமா: உன் மகனுக்கு நான் ருக்மணியைச் சந்தோஷமாகக் கொடுக்கிறேன்—ஆனால், ஒரு நிபந்தனை...

நாயார்: நீ எத்தனை நிபந்தனை போட்டாலும் சுப்பு ஒத்துக்கொள்ளுவான்—ருக்மணி கிடைத்தால் போதும் அவனுக்கு...

சின்ன மாமா: அவன் கதை இனிமேல் எழுதுகிற போது என்னைப்பற்றி எப்பவும் எழுதப்படாது. அதுதான் நான் கேட்கிற நிபந்தனை...

சுப்பிரமணியம்: மாமா, அது எனக்குத் தெரியாதா?—இந்த நாவலைப் பற்றி உங்களுக்குத் திருப்தி தானே?...

சின்ன மாமா: இந்த மாதிரி எழுதினால் எனக்கு ரொம்பத் திருப்திதான்—அதிலும் அந்த லோபகாந்தன் இருக்கிறானே, அவனை நான் மறக்கவே முடியாது.

சுப்பிரமணியம்: அப்படியானால் சரி, மாமா.

சின்ன மாமா : அக்கா, இந்த மாசத்திலே நல்ல முகூர்த்தம் இருக்கிறது—அதிலேயே முடித்துவிடலாம்—சந்தோஷந்தானே...?...

தாயார் : சரியப்பா, இதைத்தான் நான் எதிர் பார்த்துக்கொண்டே இருக்கிறேன்.

[சுப்பிரமணியத்தின் முகத்தில் மகிழ்ச்சி தாண்டவ மாடுகிறது.]

திரை

# அன்பு வழி

அன்பும் அஹிம்சையும் மனித ஜாதியை உய்விக்கும் சிறந்த பண்புகள். அவற்றைக் கடைப்பிடித்து வாழ்ந்தால் இந்த உலகமே வானவர் உலகமாய் மாறிவிடும் என்று பல பெரியார்கள் நமக்கு எடுத்துக் கூறியுள்ளார்கள். புத்தர், இயேசு, இராமகிருஷ்ண பரமஹம்சர், இராமலிங்க வள்ளலார் போன்ற மகான்கள் இவற்றின் பெருமையைச் சிறப்பாகத் தமது வாழ்க்கையாலும் அருள் வாக்காலும் விளக்கியிருக்கிறார்கள். காந்தியடிகள் நம் காலத்திலேயே வாழ்ந்து இதை நமக்கு மிக நன்றாகத் தெளிவுபடுத்தியிருக்கிறார். அணுக் குண்டு, ஹைட்ரஜன் குண்டு போன்ற பயங்கரமான அழிவுப் படைகள் தோன்றியிருக்கிற இக்காலத்திலே இப் பெரியார்களின் வாக்கைக் கடைப்பிடித்து ஒழுகுவது மனித இனம் பூண்டோடு அழியாமல் காப்பதற்குப் பெரிதும் இன்றியமையாததாகும். காந்தியடிகளின் உபதேசங்களை அடிப்படையாகக் கொண்டு இந்தக் கருத்தை மனத்திற் பதியவைக்க இந் நாடகம் முயற்சி செய்கிறது.

## நாடகத்தில் தோன்றுவோர்

| | |
|---|---|
| சரோஜா | சங்கரன் |
| கிருஷ்ணன் | கண்ணம்மா |

# அன்பு வழி

[ஒரு விசாலமான அறை. நாகரிகமான முறையில் அறை அலங்கரிக்கப்பட்டுள்ளது. சரோஜா சோபாவின் அருகே நின்று பாடிக் கொண்டிருக்கிறாள். நன்கு படித்த அழகிய இளமங்கை அவள். அவளுடைய அண்ணன் கிருஷ்ணன் குஷன் நாற்காலி யொன்றில் அமர்ந்திருக்கிறான். இசையிலும் பாட்டிலும் மனதைச் செலுத்தியவன். மாலை நேரம்]

சரோஜா (பாட்டு) :

பல்லவி

காண்பதென்றோ நாம் இனிமேல்
காந்தியைப்போலொரு சாந்த மகாத்மாவைக் (காண்)

அநுபல்லவி

மாண்பெலாம் நிறைந்தநல் வைஷ்ணவனும் காந்தி
மறைந்தபின் அவர்போல் வைஷ்ணவன் தனையே (காண்)

சரணம்

பாரதப்போரினில் பார்த்த சாரதியாய்த்
தேரினை நடத்திய ஸ்ரீபரந்தாமன்போல்
பாரத தேசத்தின் சாரதியாய் நின்று
போரினில் ஜயம்தந்த சாரதி காந்திபோல் (காண்)

கதியிலாமாந்தருக்கே கதியென நின்றவர்
கருணை நல்லன்பஹிம்சை உருவென வந்தவர்
புதுநெறி போதிக்க உலகினில் தோன்றிய
புத்தரும் யேசுவும்போல் உத்தமனைப் புவிமேல் (காண்)

கிருஷ்ணன் (மகிழ்ச்சியோடு): சரோஜா, உனது பாட்டிலே சோகம் குழைந்திருக்கிறது. காந்தி மகானை இனி அந்த சாந்தவடிவமான மேனியோடு காண முடியாது என்பது மெய்தான். ஆனால், அவர் மறைந்தே போய்விட்டார் என்று நினைப்பது தவறு. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே இந்தப் பாரத பூமியிலே நடந்தாரே புத்தர்—அந்த மகான் மறைந்தா போய் விட்டார்? இயேசுமகான் இன்று மறைந்துவிட்டாரா? அவர்களைப்போல காந்தியடிகளும் சிரஞ்சீவியாக நம்மோடிருக்கிறார்.

சரோஜா: அண்ணா. அந்த மோகனப் புன்னகையை இனிக் கண்டு மகிழ முடியுமா என்று என் உள்ளம் ஏங்கு கிறது. காந்திமகான் ஹரிஜனங்களின் க்ஷேமத்தை நாடி நிதி திரட்டிக்கொண்டு தமிழ் நாட்டிற்கு வந்தாரே அந்த சம்பவம் ஞாபகத்திலிருக்கிறதா?

கிருஷ்ணன்: அது மறந்து போகுமா? நீகூட உன் கைவிரலிலிருந்த மோதிரத்தைக் கழற்றி அவருக்குக் கொடுத்தாயே?

சரோஜா: ஆமாம்; நான் அவருடைய கையெழுத்து வேண்டுமென்று கேட்டேன். ஹரிஜன நிதிக்கு ஐந்து ரூபாய் கொடுத்தால் எழுதித் தருவதாகச் சொன்னார்: சரியென்று நான் ஐந்து ரூபாயை எடுத்துக் கொடுத்து விட்டுத் தமிழிலே கையெழுத்து வேணுமென்றேன். உடனே அவர், 'தமிழா? அதற்கு விலை ஜாஸ்தி யாயிற்றே?' என்று சொல்லிக்கொண்டே சிரித்தார். அண்ணா, அந்தச் சிரிப்பை என்னால் மறக்கவே முடியாது.

கிருஷ்ணன்: அவர் கேட்டால் லக்ஷக்கணக்காகப் பணம் வந்து குவிந்தது. மக்கள் அவரைத் தேடிக் கொண்டுபோய்க் கொடுத்தார்கள்.

சரோஜா : அவர் தமக்காக ஒன்றும் தேடிக்கொள்ள வில்லை. அதனால்தான் அவரைத் தேடி எல்லாம் வந்தது.

கிருஷ்ணன் : அவர் மறைந்து போனபோது அவருக் கிருந்த ஆஸ்தியைப் பார்த்தாயா? ஒரு கடிகாரம், ஒரு மூக்குக் கண்ணாடி, ஒரு ஜோடி கட்டைச் செருப்பு... அவ்வளவுதான்.

சரோஜா : அண்ணா, காந்தியடிகள் தம்மையே இந்த தேசத்திற்காக அர்ப்பணம் செய்தவர். அவருக்கு உடமை யும் பொருளும் எதற்கு வேண்டும்?

கிருஷ்ணன் : ஆமாம், நீ சொல்லுவதுதான் உண்மை. அவர் எதையுமே தமக்கெனத் தேடிக்கொள்ளவில்லை; அதனால்தான் எல்லாம் அவரைத் தேடி வந்தன. எல்லாம் தமக்கே வேண்டும் என்பவனுக்கு ஒன்றும் கிடைக்காது; எல்லாம் பிறருக்கே என்பவனுக்கு எல்லாம் கிடைக்கும். இதுதான் ரகசியம்.

சரோஜா : அண்ணு, கண்ணம்மா ஒரு பாட்டு எழுதி யிருக்கிறுள், கேட்டீர்களா? காந்திமகான் பேரில்...

கிருஷ்ணன் (உற்சாகத்தோடு) : அப்படியா? உன் மகள் அதற்குள்ளே பாட்டு எழுத ஆரம்பித்து விட்டாளா? எங்கே அவளைக் கூப்பிடு—கேட்கலாம்.

சரோஜா: கண்ணம்மா—எங்கே அவள்? கண்ணம்மா

கண்ணம்மா : ஏம்மா—இதோ வந்துவிட்டேன்.

[கண்ணம்மா துள்ளிக் குதித்துக்கொண்டு ஓடி வருகிறுள். அவளுக்குச் சுமார் பத்து வயதிருக்கும்.]

சரோஜா : கண்ணு—எங்கே, மாமாவுக்கு நீ எழுதின பாட்டைப் பாடிக் காண்பி.

கண்ணம்மா: காந்தித் தாத்தா பாட்டாம்மா?

சரோஜா: ஆமாம், அதைத்தான் பாடு.

கண்ணம்மா (பாட்டு):

காந்தி யெனும் போதே—உள்ளத்தில்
சாந்தி பிறக்கு தம்மா—அவர்
ஆய்ந்தநல் வாசகத்தால்—உலகின்
அல்லல் தொலையு மம்மா (காந்தி)

மாந்தரில் மாணிக்கம்போல்—அவர்தான்
வந்தனர் நம்மிடையே—அவர்
சாந்த வடிவம் காண—என்னதான்
தவங்கள் செய்தோ மம்மா (காந்தி)

சத்தியமே வெல்லும்—முடிவினில்
தர்மமே ஓங்குமென்றார்—அவர்
மெத்தவும் நன்னெறியால்—சுதந்திரம்
மேவிடச் செய்தாரம்மா (காந்தி)

தேசத்தின் தந்தையென்றே—அனைவரும்
சேர்ந்து நின்றே துதிக்க—அவர்
மாசற்ற ஜோதியைப்போல்—எங்கள்
வாழ்வை உயர்த்த வந்தார் (காந்தி)

[பாட்டு முடிந்ததும் சரோஜாவும் கிருஷ்ணனும் மகிழ்ச்சியோடு கை தட்டுகிறார்கள்.]

கிருஷ்ணன்: பேஷ், பேஷ், ரொம்ப நன்றாயிருக்கிறது. நல்ல கருத்துக்கள்—காந்திமகான்தான் நம்முடைய பாரத தேசத்தின் தந்தை—சந்தேகமேயில்லை.

சரோஜா: அவரில்லாவிட்டால் நமக்கு சுயராஜ்யம் கிடைத்திருக்குமா? இந்தத் தேசத்தைப் படுகுழியிலிருந்து மேலே தூக்கிவிட மகாத்மா காந்தி தோன்றினார்.

கிருஷ்ணன் : இந்த தேசத்தின் நலத்திற்காக மட்டும் அவர் தோன்றினாரென்று நான் கருதவில்லை. அவர் இந்த உலகம் நாசமடையாமல் காப்பதற்கு உலகத்திலுள்ள எல்லாத் தேசங்களுக்கும் வழிகாட்ட வந்தாரென்றுதான் நான் சொல்லுவேன்.

சரோஜா : அண்ணா, இன்று உலகம் போகிற போக்கைப் பார்த்தால் அது தப்பிப் பிழைக்குமா என்பது சந்தேகமாகத்தான் இருக்கிறது. அணுகுண்டும், ஹைட்ரஜன் குண்டும் உலகத்திற்கே யமனாக வந்திருக்கின்றன.

கண்ணம்மா : அதுக்குத்தானே மகாத்மா சண்டையே கூடாது என்று சொல்லியிருக்கிறார்? சுயராஜ்யம் வாங்குவதற்குக்கூட ஆயுதமெடுத்துச் சண்டை போடக்கூடாது என்று சொல்லிவிட்டாரே?

கிருஷ்ணன் : இனிமேல் ஆயுத பலத்தையே நம்பினால் உலகத்தின் கதி அதோகதிதான். அணுகுண்டு, ஹைட்ரஜன் குண்டுகளாலேயே உலகம் அழிந்து போகும்.

சரோஜா : அப்படியிருந்தாலும் ஒவ்வொரு நாட்டு விஞ்ஞானிகளும் அந்தமாதிரி அழிவுப் படை யுண்டாக்கும் வேலையில்தானே ஈடுபட்டிருக்கிறார்கள்? அவர்களுடைய அறிவுத் திறமையெல்லாம் இப்படி நாச வேலைக்கே உபயோகமாகிறது.

கிருஷ்ணன் : ஒருவன் அணுகுண்டு, தயார் செய்தால் இன்னொருவன் அதைவிடப் பயங்கரமான ஹைட்ரஜன் குண்டு கண்டுபிடிக்க முனைகிறான். இப்படி நாச காரியத்தில் இன்று ஒரே போட்டியாக இருக்கிறது.

சரோஜா : உலகத்திலிருக்கிற விஞ்ஞானிகளையெல்லாம் முதலில் சிறையிலிட்டுப் பூட்டி வைக்க

வேண்டும். அப்பொழுதுதான் மானிட ஜாதி பிழைக்கும்.

கிருஷ்ணன் : எறும்பை அழிக்க வேண்டுமென்றால் கடவுள் என்ன செய்கிறார் தெரியுமா? அதற்கு இறகு உண்டாகச் செய்கிறார். அது உடனே பறந்து போய் நெருப்பில் விழுந்து சாகிறது. அப்படித்தான் நமக்கு இந்த அறிவு கிடைத்திருக்கிறது. மானிட ஜாதி அதன் அறிவுத் திறமையாலேயே அழிவைத் தேடிக்கொண்டிருக்கிறது.

(பாட்டு)

பல்லவி

அறிவு கொண்ட மனித ஜாதி
அழிவை நோக்கி ஏகுமோ (அறிவு)

அனுபல்லவி

சிறகுகொண்ட எறும்புதீயைத் தேடிச்சென்று மாய்தல்போல்
அறிவு கொண்ட மனிதனிந்த அறிவைத்தீதாய் மாற்றவோ

சரணம்

அளவிலாகல் இன்பமெய்த அறிவைப்பெற்ற போதிலும்
அழிவுதேடிப் படைகள்நாடி அவனிவாடி நின்றதே
பலமெனபபடை அணுவைநாடினல் பாரில் மானிடர் நாசமே
பகைமைதள்ளியே அண்ணல் காந்திசொல் பாதை நாடுவோம்
வாழவே (அறிவு)

கண்ணம்மா : அதோ, அப்பா வந்துவிட்டார்...... அப்பா உன்னையெல்லாம் ஜெயிலில் போட வேண்டுமாம். அம்மா சொல்கிறாள்.

[சங்கரன் உள்ளே நுழைகிறான். அவன் ஒரு விஞ்ஞானி.]

சங்கரன் : கிருஷ்ணு, எப்போ வந்தாய்? ஊரில் எல்லோரும் சௌக்கியந்தானே?

கிருஷ்ணன் : ஆமாம், சௌக்கியந்தான். சாயங் காலம் நான்கு மணி ரயிலில் வந்தேன். உனது விஞ்ஞான ஆராய்ச்சிக் கூடத்திலிருந்து வர இவ்வளவு நேரமா?

சங்கரன் : எனக்கு விஞ்ஞான ஆராய்ச்சியிலே விருப்பம். உனக்குப் பாட்டெழுதுவதிலும் பாட்டுப் படுவதிலும் விருப்பம்.

கிருஷ்ணன் : சங்கரா, கண்ணம்மா ஒரு பாட்டு எழுதியிருக்கிறுள். அதை எனக்குப் பாடிக் காட்டினுள். ரொம்ப நன்றுயிருக்கிறது.

சங்கரன் : அவளுக்குப் பாட்டென்றுல் ஒரே பைத் தியம். எல்லாம் உன்றுல் வந்ததுதான். சரோஜாவும் கண்ணம்மாளும் உன் போதனைப்படிதான் நடக்கிறுர்கள்.

சரோஜா : ஆமாம். நாங்கள் பாட்டுப் பாடிஞல் எல்லாம் கெட்டுப் போகும். நீங்கள் சயன்ஸ் ஆராய்ச்சி பண்ணிஞல் உலகமே க்ஷேமம் அடையும். அதுதான் உலகம் இன்றைக்கு க்ஷேமமாக இருக்கிறதே...

கண்ணம்மா : அப்பா, விஞ்ஞானிகளையெல்லாம் ஜெயிலில் போட்டுவிட வேண்டுமென்று அம்மா கொஞ்ச நேரத்திற்கு முன்புதான் சொன்ஞள்.

சங்கரன் (சிரித்துக்கொண்டே) : நல்லவேளை, ஜெயி லில்தானே போடச் சொன்ஞள்? தூக்கில் போடச் சொல்லவில்லையே? ஜெயிலிலே போட்டு அங்கே ஒரு ஆராய்ச்சிச் சாலையும் ஏற்படுத்திவிட்டால் எங்களுக்கு நிம்மதியாகப் போய்விடும். ஒரு தொல்லையும் இல்லாமல் ஆராய்ச்சி செய்துகொண்டிருக்கலாம்.

சரோஜா : ஆராய்ச்சி என்னத்திற்கு? அணுகுண்டுக்கு அண்ணனாக வேறொரு குண்டு கண்டுபிடித்து உலகத்தை அழிப்பதற்கா?

சங்கரன் : அணுகுண்டை விஞ்ஞானிகள் கண்டு பிடித்தார்களே ஒழிய அவர்கள் அதை யார்மேலும் போடவில்லையே? ஜப்பானில் அணுகுண்டை விஞ்ஞானி களா போட்டார்கள்?

சரோஜா : அவர்கள் கண்டு பிடிக்காவிட்டால் மற்ற வர்கள்தான் எப்படிப் போட முடியும்?

சங்கரன் : சரோஜா, நீ சொல்வது வேடிக்கையாக இருக்கிறது. ஒரு காலத்திலே நெருப்புண்டாக்குவது எவ்வளவோ கஷ்டமாக இருந்தது. சயன்ஸின் உதவி யால் நெருப்புக் குச்சி கிடைத்தது. அதை உபயோகித்து நெருப்புண்டாக்கி உணவு சமைக்கலாம். வீட்டில் வெளிச்சம் உண்டாக்கலாம். அதை விட்டுவிட்டு ஒருவன் வீட்டையே கொளுத்த ஆரம்பித்தால் சயன்ஸ் என்ன செய்யும்? அந்த நெருப்புக் குச்சிதான் என்ன செய்யும், பாவம்?

சரோஜா : பிறகு எதற்காக விஞ்ஞானிகள் அழிவுப் படைகளை உற்பத்தி செய்கிறார்கள்?

சங்கரன் : அழிக்கும் படையென்று எதுவும் தனி யாகக் கிடையாது. அதை உபயோகிக்கும் முறையில்தான் அழிவோ அல்லது நன்மையோ ஏற்படுகிறது. மின் சாரத்தை உபயோகித்து ஒரு மனிதனைக் கொல்லலாம். ஆனால், அதையே பயன்படுத்தி விளக்குப் போடலாம்; ரேடியோக் கேட்கலாம், சினிமாக் காட்சி பார்க்கலாம்.

கிருஷ்ணன் : ஆகாய விமானத்தைப்பற்றி பாரதியார் சொல்லியிருப்பது தெரியுமா? ஆகாயத்தில்

பறக்க முடியும் என்று தெரிவதற்கு முன்னே அதை உபயோகித்து வேறு நாடுகளின்மீது குண்டு போடலாம் என்று மனிதன் தீர்மானிக்கிறான்.

சங்கரன் : அதற்கு விஞ்ஞானி என்ன செய்ய முடியும்? இயற்கையின் ரகசியங்களை அறியவும், இயற்கையை வெல்லவும் விஞ்ஞானி பாடுபடுகிறான். அவன் கண்டு பிடித்ததை அழிவுப் படையாக மக்கள் உபயோகிக்கிறார்கள். மனித இயல்பு அப்படியிருக்கிறது. அதிலே விஞ்ஞானியும் கட்டுண்டு கிடக்கிறான்.

சரோஜா : மனிதன் இன்றும் தனது மிருக சுபாவத்தை விட்டொழிக்க முயலவில்லை. என்னவோ நாகரிகம் அடைந்துவிட்டதாக மட்டும் பெருமையடித்துக் கொள்கிறான்.

கிருஷ்ணன் : பெர்னாட்ஷா இதே கருத்தை ரொம்ப அழகாகச் சொல்லியிருக்கிறார்?

சங்கரன் : அவர் என்ன சொல்கிறார்?

கிருஷ்ணன் : மானிட ஜாதி எத்தனையோ துறைகளில் முன்னேற்றமடைந்திருக்கிறதாகவும், அதன் நாகரிகம் மிகவும் உன்னத நிலை அடைந்திருப்பதாகவும் நிரூபிக்க வேண்டுமென்று ஒருவர் எத்தனையோ சிரமப்பட்டு ஒரு பெரிய புஸ்தகம் எழுதியிருக்கிறாராம். அந்தப் புஸ்தகத்தைப் பார்த்துவிட்டு பெர்னாட்ஷா என்ன சொன்னார் தெரியுமா? இதற்காக இந்தமாதிரி இவ்வளவு கஷ்டப்பட்டிருக்க வேண்டியதில்லையே, ஒரே வாக்கியத்தில் மனிதனுடைய முன்னேற்றத்தைக் கூறிவிடலாமே என்றார். எப்படி என்று கேட்டபோது அவர் சொன்னார் : காட்டுமிராண்டியாகத் திரிந்த ஆதிமனிதன் மற்றவர்களைக் கொல்ல விஷந் தோய்ந்த அம்பை

உபயோகித்தான்; இப்பொழுது மனிதன் மற்றவர்களைக் கொல்ல விஷப்புகையை உபயோகிக்கிறான். இவ்வளவு தான் முன்னேற்றம் என்றாராம்.

சரோஜா : அண்ணா. பெர்னாட்ஷா சொன்னது ரொம்ப சரி. சயன்ஸ் வளர்ந்து என்ன பிரயோஜனம்? அறிவுதான் பெருகியும் பிரயோஜனம் என்ன? மனிதனுடைய மிருக சுபாவம் இன்னும் மாறவில்லையே?

சங்கரன் : மனிதனுக்கு அன்பு, கருணை, இரக்கம் முதலிய உணர்ச்சிகள் மேலோங்கவேண்டும் என்பதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன்.

கிருஷ்ணன் : அப்படி ஒங்கியில்லாதபோது அவனிடத்திலே பயங்கரமான அழிவுப் படைகளைக் கொடுப்பது உலகத்திற்கே ஆபத்துதான். இன்றைக்கு அம்மாதிரியான நெருக்கடியிலேதான் உலகம் தத்தளித்துக் கொண்டிருக்கிறது.

சங்கரன் : அன்புணர்ச்சிகளைப் பெருக்குவதற்கு விஞ்ஞானிகள் தடை சொல்லவில்லையே? அதை நன்றாகச் செய்யலாம். நாங்களும் ஒத்துழைக்கத் தயார்.

சரோஜா : இதுவரையில் மனிதன் எல்லா அம்சங்களிலும் ஒரே மாதிரி வளரவில்லை. சில அம்சங்களை அவன் கவனிக்கவே யில்லை. அறிவைப் பெருக்கிக் கொண்டிருந்தான்; அதே மாதிரி அன்பைப் பெருக்க நினைக்கவில்லை.

கிருஷ்ணன் : அதுதான் உண்மை. மனிதனுடைய தலை பருத்துப் போய்விட்டது. உள்ளம் சுருங்கிக் கிடக்கிறது. இப்படியே போய்க்கொண்டிருந்தால் அந்தத் தலையின் பாரமே மனிதனை அழுத்திக் கொன்று

விடும். ஐன்ஸ்டன் ஒரு விஷயம் சொன்னார் ஞாபகம் இருக்கிறதா?

சங்கரன் : பெர்னாட்ஷா ஆச்சு. இப்போ ஐன்ஸ்டனா? சரி, அவர் என்ன சொன்னார் ?

கிருஷ்ணன் : மூன்றாவது உலக யுத்தத்தில் என்னென்ன ஆயுதங்களை உபயோகிப்பார்கள் என்று யாரோ அவரைக் கேட்டார்களாம்......

சங்கரன் : அணுக்குண்டு, ஹைட்ரஜன் குண்டு, சாவுக்கதிர்கள், நோய்க் கிருமிகள், பறக்கும் தட்டு என்றெல்லாம் சொன்னாராக்கும் ?

கிருஷ்ணன் : அப்படியெல்லாம் சொல்லவில்லை.

சரோஜா : பின்னே என்ன சொன்னார் ?

கிருஷ்ணன் : மூன்றாவது உலக யுத்தத்திலே உபயோகமாகும் ஆயுதங்களைப்பற்றி அவரால் நிச்சயமாகச் சொல்ல முடியாதாம். ஏனென்றால் எத்தனையோ ரகசியமாகப் படைகளைப் பல நாட்டவர்களும் செய்துவருகிறார்களாம். ஆனால், நான்காவது உலக யுத்தத்தில் உபயோகமாகும் ஆயுதங்களைப் பற்றித் தம்மால் நிச்சயமாகக் கூற முடியும் என்று அவர் பதில் சொன்னார். நாலாவது யுத்தத்தில் கல்லையும் மரக் கொம்புகளையுந்தான் உபயோகிப்பார்களாம்.

கண்ணம்மா : அதெப்படி மாமா ? ஐன்ஸ்டன் சொல்லுவது எனக்கு விளங்கவில்லையே?

சரோஜா : மூன்றாவது உலக யுத்தத்திலேயே அறிவு படைத்த மக்களெல்லாம் மடிந்து போவார்கள். ஏதோ சில மலை ஜாதியார்கள் வேண்டுமானால் தப்பிப் பிழைப்

பார்கள் என்பது ஐன்ஸ்டனுடைய அபிப்பிராயமா, அண்ணு ?

கிருஷ்ணன் : ஆமாம், அது நான் அவருடைய கருத்து. அதாவது மூன்ருவது உலக யுத்தம் வந்தால் மனித ஜாதியே அநேகமாக அழிந்து போகும். தப்பிப் பிழைத்து யாராவது இருந்தால் அது மலே ஜாதியார் களாகத்தான் இருக்க முடியும். அவர்கள் சண்டை போட்டால் கல்லேயும் குச்சியையுந்தான் உபயோகிந் பார்கள். அதுதான் அவர் சொல்லுகிற நான்காவது உலக யுத்தம்.

சரோஜா : உலகமே இப்படி அழிந்து போகாமலிருப் பதற்காகத்தான் காந்திமகான் வழி சொல்லுகிருர்.

சங்கரன் : எங்கே—இதற்கு ஒரு பாட்டுச் சொல்லு வாயே—அதைப் பாடு சரோஜா. பாட்டையாவது கேட்டு சந்தோஷப்படலாம். இப்படி அழிவைப்பற்றியே எதற்கு நினேத்துக்கொண்டிருக்க வேண்டும்?

சரோஜா : கண்ணம்மாதான் அதை நன்ருகப் பாடுவாள் ; எங்கே அதைப் பாடு கண்ணம்மா.

கண்ணம்மா : (பாட்டு)

பல்லவி

சாந்த மூர்த்தி காந்தியின்
சத்ய வார்த்தைக் கேளுங்கள்— (சாந்த)

அநுபல்லவி

ஆய்ந்த வேதவாசகம் அவர் உரைக்கும் மந்திரம்
மாந்தர் இன்பங்கூடியே வாழ நல்ல தந்திரம் (சாந்த)

சரணம்

அன்பெனுந்தேன் ஊறிடும் அஹிம்சை வாழ்வை யாவரும்
ஆர்வமாகப் போற்றினால் அல்லல் யாவும் நீங்கிடும்
நன்மையாவும் கூடிடும் நாசப் போரும் ஓடிடும்
நானிலம் நல் வீடதாய் வானவாழ்வு மேவிடும் (சாந்த)

கிருஷ்ணன்: அன்பு, அஹிம்சை முதலிய உன்னத உணர்ச்சிகளை நாம் போற்றாமல் விட்டு விட்டோம். அதை எடுத்துக் காட்டி உலகத்திற்கு க்ஷேம முண்டாக்கவே காந்தியடிகள் தோன்றினர்.

சங்கரன்: சந்தேகமென்ன? நானும் அதை ஒப்புக் கொள்கிறேன்.

சரோஜா: அன்பு வளர வேண்டும்; அஹிம்சை ஓங்க வேண்டும்—பகைவர்களையும் மன்னித்து நேசிக்கும் படியாக நமது உள்ளம் மாறவேண்டும்.

கண்ணம்மா: அப்பா, இனிமேல் உங்களுக்கு ஜெயில் கிடையாது. அம்மா மன்னிப்புக் கொடுத்து விடுவாள்.

[எல்லாரும் சிரிக்கிறார்கள்.]

சரோஜா: காந்தி மகான் அன்பு வழியைக் கண் முன்பு தமது வாழ்க்கையாலேயே எடுத்துக்காட்டி அதன் உயர்வை நிலை நாட்டினர். அந்த ஒரு வழியினால்தான் உலகம் பிழைக்க முடியும்.

கிருஷ்ணன்: கொஞ்சம் யோசித்துப் பார்த்தால் யுத்தத்தின் பேரால் ஆயிரக்கணக்கான மக்களைக் கொலை செய்வது எவ்வளவு அநாகரிகம் என்பது தெரியவரும்.

கொல்வது காட்டு மிருகங்களின் இயல்பு. மனிதன் தன்னை சிருஷ்டியிலே உயர்ந்தவன் என்று மதிக்க வேண்டுமானுல் இந்த விலங்கு நியதியைப் பின்பற்றக் கூடாது.

சரோஜா : சாதாரணமான மக்கள் யுத்தத்தை விரும் புவதில்லை. இந்த அரசியல் வாதிகளும் சுயநலக்காரர் களுமே அதைக் கிளப்பிவிடுகிறுர்கள்.

சங்கரன் : நல்ல வேலை. விஞ்ஞானிகளை விட்டு விட்டாயே. நாங்கள் பிழைத்தோம்.

கிருஷ்ணன் (சிரித்துக்கொண்டே): ஓகோ, அப்படிச் சுலபமாகத் தப்பித்துக்கொள்ளப் பார்க்கிருயா ? அது முடியாது. யோசித்துப் பார்த்தால் தவறு எல்லோரிடத் திலும் கொஞ்சமாகவோ அதிகமாகவோ இருக்கத்தான் செய்கிறது. முதலாவது நமது கல்வி முறையிலேயே குறைபாட்டைக் காணலாம். அதையெல்லாம் மாற்ற வேண்டும். காந்தியத்தால்தான் அது சாத்தியமாகும்.

சங்கரன் : எனது நண்பன் ஒருவன் வைத்தியப் படிப்பிற்காக அமெரிக்காவிற்குச் சென்றிருந்தான். அங்கே காந்தியடிகளைப் பற்றி மக்கள் என்ன கருது கிறுர்கள் என்பதற்கு ருசிகரமான ஒரு சம்பவத்தைச் சொன்னுன்.

கண்ணம்மா : அமெரிக்காவிலே இருக்கிறவர்களுக்கு மகாத்மாவைப் பற்றித் தெரியுமா, அப்பா ?

சங்கரன் : அவரைப் பற்றித்தான் அவர்களுக்குத் தெரியும். இந்தியா என்ருல் பொதுமக்களிலே ஒரு சிலருக்குக்கூட அவ்வளவு ஒன்றும் தெரியாதாம். ஆனுல், காந்தியென்ருல் அநேகமாக எல்லோருக்கும் தெரியும்.

சரோஜா : உங்கள் நண்பர் என்ன சொன்னார், அதைக் கூறுங்கள்.

சங்கரன் : ஒரு நாள் என் நண்பன் அமெரிக்காவிலே உள் நாட்டிலுள்ள ஒரு இடத்திற்குப் போனானும். அங்கே ஒரு ரெயில்வே ஸ்டேஷனில் ரெயிலுக்காக நிற்கிறபோது ஒரு போர்ட்டர் அவனிடம் பேச வந்தானும்.

கண்ணம்மா : யார் போர்ட்டரா ?

சங்கரன்: ஆமாம்; என் நண்பனை இந்தியன் என்று தெரிந்து கொண்டு அவனிடத்திலே மகாத்மாவை பற்றிப் பேசினானும். இந்தியாவா, காந்தி தேசந்தானே ? என்று கேட்டானும்.

சரோஜா : இந்தியா என்றவுடனே மகாத்மா பெயர் தான் முதலில் ஞாபகத்திற்கு வருகிறது.

சங்கரன் : காந்தி பிறந்த இந்தியாவிலிருந்து வரு கின்ற உங்களைப் பார்த்ததே எனக்கு ரொம்ப சந்தோஷம் என்று அவன் சந்தோஷப்பட்டானும். பிறகு யுத்தத்தைப் பற்றிப் பேச்சு வந்தது. யுத்தம் செய்யாமலே உங்கள் தேசத்திற்கு காந்தி சுதந்திரம் வாங்கிக் கொடுத்தாராமே என்று அவன் ஆச்சரியத்தோடு கேட்டானும்.

கிருஷ்ணன் : ஆயுதத்தையே நம்பியிருக்கும் தேசத் தாருக்குக் காந்தியடிகளின் அன்பு வழி ஆச்சரியமாகத் தான் இருக்கும்.

சங்கரன் : பிறகு என்னுடைய நண்பன் காந்தி மகானுடைய வாழ்க்கையைப் பற்றிச் சொன்னானும். காந்தி மகானின் வழியைப் பின்பற்றினால் உலகத்திலே யுத்தமே ஏற்படாது. எல்லோரும் சகோதரர்களாக இன்ப மாக வாழ முடியும் என்றும் எடுத்துக் காட்டினானும்.

சரோஜா: மகாத்மாவிடம் அவனுக்கு மிகுந்த மரியாதை ஏற்பட்டிருக்கும்.

சங்கரன்: காந்தி மகான் பிறந்த நாட்டிலே பிறந்ததற்காக உங்களைக் கும்பிடுகிறேன் என்று என் நண்பனை அவன் கும்பிட்டானும்.

கிருஷ்ணன்: பொது மக்கள் யாருமே யுத்தத்தை விரும்புவதில்லை: அவர்கள் தங்கள் மனைவி மக்களோடு அமைதியாக வாழவே விரும்புகிறார்கள். அமெரிக்காவிலும் அப்படித்தான்; ரஷ்யாவிலும் அப்படித்தான். அரசியல் வாதிகளுடைய சூழ்ச்சிகள்தான் யுத்தத்திற்குக் காரணமாகின்றன.

சரோஜா: உலகத்திலே பாதிப்பேர் நாங்கள் பெண்கள் இருக்கிறோம். நாங்களும் யுத்தத்தை விரும்புவதில்லை.

சங்கரன்: உலகத்திலே பெரும்பான்மையோர் யுத்தத்தை வெறுக்கத்தான் செய்கிறார்கள். இருந்தாலும் எப்படியாவது அது வந்துவிடுகிறது. பிறகு அத்தனை பேரும் அந்த வெறியிலே அகப்பட்டுக் கொள்கிறார்கள். அதுதான் வேடிக்கை.

சரோஜா: அன்பு அஹிம்சையெல்லாம் இன்னும் அவ்வளவு வலிமை யடையவில்லை. காந்தியடிகளின் உபதேசத்தால்தான் அவை மறுபடியும் தலைதூக்க வேண்டும்.

கிருஷ்ணன்: அன்புக்கும் அஹிம்சைக்கும் இன்று ராட்டைதான் சின்னம். கொடுமைக்கும் ஹிம்சைக்கும் பீரங்கி சின்னமாக இருக்கிறது. இருந்தாலும் அந்தப் பல

மற்ற ராட்டைதான் கடைசியில் வெல்லப் போகிறது. சரோஜா, அந்த ராட்டைப் பாட்டைப் பாடு கேட்போம்.

சரோஜா (பாட்டு)

பல்லவி

செஞ்சுருட்டி

ஆடு ராட்டே சுழன்றாடு ராட்டே
அன்பின் வடிவமாய் நின்றாடு ராட்டே
தேடறிய காந்திமகான் சாந்தி எய்தவே—இசை
பாடிச் சுழன்று சுழன்றாடு ராட்டே. (ஆடு)

சரணம்

சாரங்.

பாரினில் அஹிம்சை நெறி ஓதியெங்குமே—இன்பம்
பாயப் பரிந்து நின்று ஆடுராட்டே
ஆருயிர்கள் இன்புறவே வாழ்க்கை கொண்டவன்—காந்தி
அற்புதச் சொல்லோசை எழ ஆடுராட்டே (ஆடு)

சிந்து பைரவி

சாந்தமுனி காந்திமகான் மறைந்திடினும்—அவர்
தர்மவடிவமாக நின்று ஆடு ராட்டே
மாந்தருக்குக் காந்தியருள் வாசகமெல்லாம்— உன்றன்
வடிவில் குறித்தாரென்று ஆடுராட்டே (ஆடு)

புன்னாக வராளி

உண்மை உயருமென்று ஆடு ராட்டே—எங்கும்
ஓங்கும் அமைதியென்று ஆடு ராட்டே
தண்மை வளருமென்று ஆடு ராட்டே—காந்தி
அண்ணல் மொழி ஓங்கும் என்று ஆடுராட்டே (ஆடு)

கிருஷ்ணன் : உலகத்திலே இருக்கிற பெரிய அறிவாளிகளெல்லாம் இனிமேல் மானிட ஜாதிக்கு காந்திய வழியில்தான் கதிமோட்சம் இருக்கிறதென்று நம்புகிறார்கள்.

சங்கரன் : உலக சமாதானப் பிரியர்கள் மகாநாட்டிற்கு ஐன்ஸ்டைன் ஒரு செய்தி அனுப்பியிருந்தார் கவனித்தாயா?

கிருஷ்ணன் : காந்தியடிகளின் உபதேசத்தைக் கடைப் பிடித்தால்தான் இனி உலகத்திற்கு க்ஷேமமுண்டு என்று அவர் எழுதியிருந்தார்.

சங்கரன் : அந்த மகாநாட்டிற்கு வந்திருந்த பல பிரமுகர்கள் தமிழ் நாட்டிற்கு வந்திருந்தார்கள். உலகத்திலுள்ள எல்லா தேசங்களிலிருந்தும் அவர்கள் வந்தவர்கள். அவர்கள் அனைவரும் மகாத்மாவின் கொள்கையிலேயே நிச்சயமான நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். அவர்கள் பேச்சிலிருந்து அது நன்றாகத் தெரியவந்தது.

கிருஷ்ணன் : காந்திய தத்துவத்தை நம்மைவிட அவர்கள் நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள்.

சரோஜா : அவர்களெல்லாம் தீவிரமாகக் காந்தி வழியை ஒவ்வொரு நாட்டிலும் பிரசாரம் செய்ய வேணும்.

கிருஷ்ணன் : நம் தேசத்து மக்கள்தான் அதை நன்றாகச் செய்ய வேண்டும். உலகமே இன்று பாரத தேசத்தை எதிர்பார்த்திருக்கிறது.

சரோஜா : இந்த சமயத்திலே காந்தியடிகள் உயிரோடு நமது மத்தியிலே இல்லையே என்று என் மனம் ஏங்குகிறது.

கிருஷ்ணன் : மறுபடியும் நீ முதலில் சொன்னதையே சொல்கிறாய்.

சங்கரன் : அவர் தமது கடமையை நன்ருகச் செய்து விட்டு மறைந்து விட்டார். மறைந்து விட்டாரென்ருல் உடம்புதான் மறைந்து விட்டதென்று சொல்லவேண்டும். அவர் உபதேசம் நம் முன்ருல் தெளிவாக இருக்கிறது. அதிலே காந்தி விளங்குகிருர்.

சரோஜா : காந்திஜி இன்றிருந்தால் என்ன செய்து கொண்டிருப்பார் என்று என் மனம் அறிய விரும்புகிறது.

கிருஷ்ணன் : அவர் சர்வோதயத்திற்குப் பாடுபட்டுக் கொண்டிருப்பார்.

கண்ணம்மா : சர்வோதயம் என்ருல் என்ன, மாமா?

கிருஷ்ணன் : அதுதான் எல்லோருக்கும் இன்ப மளிக்கும் உலக சாம்ராஜ்யம். ராம ராஜ்யமும் அதுதான். கடையனுக்கும் கடையனுன மனிதனுக்கும் இன்பம் அளிக்க முயலும் அன்பு ராஜ்யம்.

சங்கரன் : நமது தமிழ்க் கவிஞன் ஒருவன் இரண்டா யிரம் வருஷங்களுக்கு முன்பே 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற உயர்ந்த கருத்தைக் கூறியிருக்கிருன். அந்த அடிப்படையிலே உலகம் ஒரு குடும்பம் போலாக வேண்டும்.

சரோஜா : ஆமாம், அப்படி ஒரு குடும்பம் போல வாவதற்கு உங்கள் சயன்ஸ் உதவ வேண்டுமே?

சங்கரன் : விஞ்ஞானம் அதற்கு நிச்சயமாக உதவும். அதாவது அதைச் சரியான முறையில் உபயோகித்தால் நல்ல பலன் கிடைக்கும். ஆகாய விமானம் உலகத்தையே ஒரு சிறு இடமாகச் செய்துவிட்டது. நான்கைந்து நாட் களில் உலகத்தையே சுற்றிவந்து விடலாம்.

சரோஜா : ஆமாம், குண்டுமாரி பொழியத்தான் இந்த வேகம் பயன்படுகிறது.

சங்கரன் : அதற்கு நாங்கள் பொறுப்பாளிகளல்ல—நாங்களும் காந்தியடிகளின் அன்புவழியை மனதார ஆதரிக்கிறோம்.

கிருஷ்ணன் : காந்தியடிகளின் அன்பு வழியைப் பின்பற்றினல் நிச்சயம் உலகம் அமைதி பெற்று ஒரு குடும்பமாக வாழும். சர்வோதயம் அன்று பால சூரியன் போல உதயமாகும்.

கிருஷ்ணன்—சரோஜா : (பாட்டு)

பல்லவி

சர்வோதயம் சாந்தம் அன்பு ராஜ்யம்— (சர்)

அனுபல்லவி

தர்மோபதேசமிது காந்திமகான் தரும்
தாரணி ஓங்கிடவே வந்த நல் மந்திரம்— (சர்)

சரணம்

எல்லோரும் ஓரினம் எல்லோரும் ஓர் குலம்
என்றே நாம் இன்பமாய் வாழ்ந்திட வந்ததாம்
வல்லாரும் எளியாரும் மாநில மீதில் ஒன்றாய்
வாழ்வினில் இன்புறும் வகை சொல வந்ததாம்— (சர்)

திரை

# மனமாற்றம்

வாழ்க்கை சிக்கல் நிறைந்தது. இல்லறத்திலே நின்று அந்த வாழ்க்கையை நடத்துகிறவர்கள் சிறந்த வெற்றி காண வேண்டுமென்றால் கணவனுக்கும் மனைவிக்குமிடையே ஆழ்ந்த அன்பிருக்க வேண்டும். அதோடு ஒருவரை மற்றவர் நன்கு அறிந்து கொண்டு அனுசரித்து நடக்கத் தெரிந்து கொள்ள வேண்டும். வண்டியிலே பூட்டிய மாடுகள் இரண்டும் ஒன்றுக்கொன்று உதவியாக நின்று வண்டியை இழுத்தால் பாரம் கூடத் தெரியாது. வண்டியும் வேகமாக முன்னேறும். இல்லறத்திலே கணவனும் மனைவியும் அப்படி நிற்கவேண்டும். அன்பிருந்தும் அவ்வாறு நிற்கப் பழகிக் கொள்ளாத நிலையிலே ஏற்பட்ட விபரீதங்களை இந்த நாடகம் சித்திரிக்கிறது.

## நாடகத்தில் தோன்றுவோர்

| | |
|---|---|
| வசந்தா | பாக்யலக்ஷ்மி |
| சாது ஆத்மாநந்தர் | தாமோதரன் |

# மனமாற்றம்

## அங்கம் ஒன்று

### காட்சி ஒன்று

[பழநியிலே சாது ஆத்மாநந்தர் ஆச்ரமத்திலே ஒரு சிறு பூந்தோட்டம். மாலை நேரம். வசந்தா மெதுவாக உலாவிக்கொண்டே பாடிக் கொண்டிருக்கிறாள். அவள் கல்லூரிப் படிப்புப் பெற்ற இளமங்கை. பெண்களின் சுதந்திரத்திலே ஆர்வம் மிகுந்தவள்.]

வசந்தா: (பாட்டு)

பல்லவி

மாநில வாழ்வு மாயமென்றறிந்தேன்
மனமே நீ யதை நினையாதே (மாநி)

அநுபல்லவி

கானல்நீர் போலக் காண்பதிவ்வுலகம்
கண்விழித் தேநீ மெய்நெறி செல்வாய் (மாநி)

சரணம்

இல்லற மென்பதோர் தொல்லையதாகும்
என்றும் நாம் ஆண்களின் கைப்பொருளாவோம்
எல்லையிலலாத இன்பத்தை நல்கும்
இறைவனை நினைந்தே கதிபெறுவாயே (மாநி)

[சாது ஆத்மாநந்தர் மெதுவாக அங்கு வருகிறார்.]

சாது: வசந்தா, நீ பாடிய பாட்டிலே சோகம் ததும்பு கின்றது: ஏதோ ஒரு ஏக்கமும் அதில் தொனிக்கின்றது.

வசந்தா: சுவாமி, எனக்கு இப்பொழுது ஒரே ஏக்கம்தான். அதைத் தாங்கள் நினைத்தால் போக்கிவிட முடியும்.

சாது: நீ விரும்பியபடியே உன்னை என் ஆச்ரமத்தில் எடுத்துக் கொண்டேனே, இன்னும் என்ன செய்ய வேண்டுமென்கிறாய்?

வசந்தா: சுவாமி, புகலிடமின்றி வந்த எனக்குத் தங்கள் புனிதமான ஆச்ரமத்தில் தஞ்சமளித்தீர்கள். அதற்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன். ஆனால், நான் தங்கள் ஆச்ரமத்தில் இருப்பதோடு திருப்தியடையவில்லை. தங்களைப்போலத் துறவறம் பூண்டு ஆத்ம ஞானத்தை அடைய விரும்புகிறேன். இந்த விருப்பத்தைத் தாங்கள் பூர்த்தி செய்யவேண்டும். நான் காஷாயம் தரித்துச் சந்நியாசினியாக ஆக வேண்டும்.

சாது (சற்று சிரித்துக்கொண்டு): வசந்தா, உன்னுடைய ஆர்வத்தை நான் பாராட்டுகிறேன். ஆனால், நீ இவ்வளவு அவசரப்பட்டுத் துறவறம் பூண முடிவு செய்யக்கூடாது என்பது என் கருத்து.

வசந்தா: நான் ஒன்றும் அவசரப்பட்டு விடவில்லை. ஆழ்ந்து யோசித்த பிறகுதான் இந்தத் தீர்மானத்திற்கு வந்திருக்கிறேன். இந்த ஆச்ரம வாழ்க்கை எனக்கு முற்றிலும் பிடித்திருக்கிறது.

சாது: இந்த ஆச்ரம வாழ்க்கை உனக்கு ஒரு புதுமையான அனுபவம். இதனால் இது உனக்கு இப்பொழுது பிடித்திருக்கிறது. கொஞ்ச நாளில் இது புளித்துப்போகும்.

வசந்தா: சுவாமி, இது என்றும் எனக்குப் பிடித்த வாழ்வாகவே இருக்கும். அதில் சந்தேகமே இல்லை.

சாது : இங்கே சினிமா உண்டா? ஆடல் பாடல் உண்டா? வேறு கேளிக்கைகள்தான் உண்டா?—ஒன்றுமே இல்லை. சென்னைப்பட்டினத்திலிருந்து வரும் உனக்கு என்றுமில்லாத ஒரு புதிய உலகம் போலத் தோன்றுகிறது இந்த ஆச்ரமம். அதனால்தான் இந்த ஆச்ரமத்தின் அமைதியும், எளிமையும் உனக்கு இப்பொழுது கவர்ச்சி தருகின்றன. இந்த உணர்ச்சி ஒரு சில நாளைக்குத்தான் நிலைக்கும். பிறகு சலித்துப் போகும்.

வசந்தா : நீங்கள் இப்படியெல்லாம் பேசி என் மன உறுதியைக் கலைக்க முடியாது.

சாது : நான் உன் உறுதியைக் குலைக்க விரும்பவில்லை. அவசரப்பட வேண்டாமென்றுதான் கூறுகிறேன்.

வசந்தா (சற்று வெறுப்புத் தொனியில்) : நான் அவசரப்பட்டுத் தீர்மானம் செய்யவில்லை என்று எத்தனை தடவை கூறுவது உங்களுக்கு?

சாது (சிரிப்புடன்) : பார்த்தாயா இதற்குள்ளே என்மேல் உனக்கு வெறுப்பேற்பட்டுவிட்டதே! இதுதான் அவசரத்தின் அடையாளம். உன் வாழ்க்கையிலே இந்த அவசரம் பல முக்கியமான சந்தர்ப்பங்களில் ஓங்கி நின்று துன்பத்தைத் தந்திருக்குமென்று நான் யூகிக்கிறேன்.

வசந்தா : ஜோஸ்யம் உங்களுக்குத் தெரியுமென்று இதுவரையிலும் நான் அறியேன்.

சாது : வசந்தா, நான் ஜோஸ்யம் சொல்லுகிறவன் அல்ல. ஆனால், உன்னுடைய மனப்போக்கை நான் கவனித்து அறிந்துகொள்ள முடியும். உன்னுடைய பிறந்தகத்திலே இருக்கும்போது கலியாணமாகிக் கணவனுடனே வாழ்ந்தால் சுதந்தரமாக வாழலாம் என்று நினைத்தாய். பிறந்த வீட்டிலே உனக்குக் கட்டுப்பாடுகள்

அதிகமென்று பட்டது. ஆனால், கலியாணமாகிய மூன்று வருஷங்களுக்குள்ளே இப்பொழுது துறவு பூண வேண்டுமென்கிறாய். கணவன் வீட்டிலும் உனக்குச் சுதந்திரம் இல்லையென்று இதற்குள்ளே தோன்றிவிட்டது.

வசந்தா : மூன்று வருஷமென்றால் ஒரு நாளல்ல. அது எனக்கு மூன்று யுகம். அத்தனை நாட்களுக்குப் பிறகு தான் நான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறேன்.

சாது : உனக்கு இப்பொழுது வயதென்ன?

வசந்தா : இருபத்தொன்று.

சாது : என்னுடைய வயது உனக்குத் தெரியுமா? எனக்கு எழுபத்திரண்டாகிறது. அதிலே பாதி நாளை நான் என் குருநாதருக்குத் தொண்டு செய்யும் சிஷ்யனாகவே கழித்தேன். முப்பது வருஷம் சோதனை செய்த பிறகுதான் அவர் எனக்குக் காஷாயம் அளித்தார். அவர் செய்ததுதான் சரியென்று நான் அறிவேன். எத்தனையோ தடவை என் மனம் சபலமடைந்திருக்கிறது; துறவு நிலையை விட்டுத் தடுமாறியிருக்கிறது.

வசந்தா : நீங்கள் தடுமாறியிருக்கலாம். அதனால்—எல்லோரும் அப்படித் தடுமாறுவார்கள் என்று எப்படி நினைக்கலாம்? என் மனதிலே தடுமாற்றம் ஒன்றுமில்லை—நான் இப்பொழுது இரண்டு காரியங்களை ஒரே தீர்மானத்தின் மூலம் சாதிக்கப் போகிறேன்.

சாது : என்ன இரண்டு காரியங்கள்?

வசந்தா : பெண்கள் துறவறம் பூண்டு சந்நியாசினிகளாக இருக்கத் தகுதியுடையவர்களல்ல என்ற எண்ணத்தை அடியோடு மாற்றப் போகிறேன்; அதோடு இனி மேல் நான் யாருக்கும் அடிமையாக இருக்கப் போவதில்லை.

சாது: உன் கணவர் உன்னிடம் அன்போடுதானே இருந்தார்? ஏதோ சில சமயங்களில் உன் இஷ்டப்படி எல்லாம் மாதர் சங்கங்களுக்கும், சினிமாக்களுக்கும் வேறிடங்களுக்கும் போகக்கூடாதென்று தடுத்தார்—அவ்வளவுதானே?

வசந்தா: தடுத்தது மட்டுமா? என்னை எத்தனை கடுமையாகப் பேசினார் என்பது உங்களுக்குத் தெரியுமா?

சாது: வசந்தா, நீ அவருடைய மனதை நன்றாக அறிந்துகொள்ளவில்லை. அவர் உன்மீதுள்ள அன்பினாலேயே சில சமயங்களில் உன்னை உன் விருப்பப்படி நடக்க விடவில்லை. அது உனக்குச் சுதந்திரக் குறைவாகத் தோன்றியிருக்கிறது. பெண்கள் சுதந்திரம் பெண்கள் உரிமை என்பனவெல்லாம் உன் மனத்திலே அதிகமான ஆதிக்கம் செலுத்தத் தொடங்கிவிட்டன.

வசந்தா: நான் யாருக்கும் உடமையாக இருக்க விரும்பவில்லை. அவர் என்னைத் தமது இச்சைப்படியெல்லாம் நடத்த முயல்வதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது.

சாது: அன்போடும் அனுதாபத்தோடும் நீங்கள் ஒருவரையொருவர் அறிந்துகொள்ள முயன்றிருக்க வேண்டும். அதுதான் சேர்ந்து வாழ்வதிலே வெற்றியும் இன்பமும் காண்பதற்கு வழி. இல்லறம் என்பது இரண்டு மாடுகளைச் சேர்த்துப் பூட்டிய வண்டி போன்றது. இரண்டும் சேர்ந்து இழுத்தால்தான் வண்டி சுலபமாக ஓடும். அதிலே பெண்கள் ஆடவர்களுக்கு வழிகாட்ட வேண்டும். முதலில் நீ உன் கணவரின் இயல்பை அறிந்துகொண்டு கொஞ்சம் அனுசரித்து நடந்தால் பிறகு அவர் உன் வழிக்கு வந்துவிடுவார். அதுதான் ரகசியம்.

வசந்தா : ஏன், முதலில் அவர் என் இயல்பைத் தெரிந்துகொள்ளக் கூடாதோ? அது எப்படியிருந்தாலும் அந்த ரகசியம் இனிமேல் எனக்குத் தெரிய வேண்டியது இல்லை. சுவாமி, நான் துடுக்காகப் பேசுவதற்காக மன்னிக்க வேண்டும். எனக்குத் துறவு நிலையிலே நிற்க உடனே உதவி புரியுங்கள். அதற்கு உங்களுக்கு விருப்ப மில்லையென்றால் நான் இங்கிருந்து வெளிக் கிளம்ப எண்ணியிருக்கிறேன்.

சாது: வசந்தா, உன் அவசரமும் துடிப்பும் எனக்குச் சிரிப்பாக இருக்கிறது. நான் உன் விருப்பத்தை நிறைவேற்ற மாட்டேன் என்று சொன்னேனா? இன்னும் சில நாட்கள் பொறுத்துக் கொள் என்றுதானே சொல்லு கிறேன். இப்பொழுது இந்த ஆச்ரமத்திலே துறவி போலவே நீ வாழ்க்கை நடத்துகிறாய். அது கொஞ்ச நாட்கள் நீடிக்கட்டும். முதலிலே ஏதாவது பரோபகாரத் தமாகச் சில சேவைகளிலே மனதைச் செலுத்து. அது உனக்கு நிம்மதியளிக்கும்.

வசந்தா : பெண்கள் உரிமைக்குப் பாடுபடுவது என்றால் எனக்கு மிகுந்த ஆர்வமுண்டு. அதைக்கூட என் கணவர் தடுத்துவிட்டார்.

சாது : நீ பால தண்டாயுதபாணி கோயிலுக்குச் சென்றிருக்கிறாயா ?

வசந்தா : மலை அடிவாரத்திற்குப் பக்கத்தில் இருக் கிறதே அந்தக் கோயில்தானே ?

சாது : ஆமாம்; அதுதான். அந்தக் கோயில் முக்கியமானது.

வசந்தா : இப்பொழுது என்னை மலை அடிவாரக் கோயிலுக்குச் செல்லச் சொல்லுகிறீர்கள். அவ்வளவு தானே ?

[கோயில் மணி ஓசை கேட்கிறது.]

சாது: அதோ பால தண்டாயுதபாணி கோயிலில் மணியோசை கேட்கிறது. மாலைக்காலப் பூசை நேரம் சமீபித்துவிட்டது. அடிவாரக் கோயிலுக்கு நீ தினமும் சென்று பிரார்த்தனை செய்து வா. அடிவாரத்திலிருந்து படிப்படியாக மலையுச்சிக்குப் போவது எளிது.

வசந்தா: சுவாமி, நான் போகட்டுமா? சேவை என்று சொன்னீர்களே அது என்னவாயிற்று?

சாது: நீ இப்பொழுது கோயிலுக்குப் போ. அங்கே சேவை செய்வதற்கு சந்தர்ப்பம் உன்னை எதிர் நோக்கி வரும்.

[வசந்தா எழுந்து புறப்படுகிறாள்.]

திரை

## காட்சி இரண்டு

[பால தண்டாயுதபாணி கோயிலில் ஒரு மண்டபம். சந்நிதியை விட்டு அது தள்ளியிருக்கிறது. பொழுது விழுந்து இருள் பரவுகிற நேரம். வசந்தா தனியாக அமர்ந்து பாடிக் கொண்டிருக்கிறாள். கோயில் கண்டாமணி அடித்து அடங்கியதும் பாட்டுத் தொடங்குகிறது]

வசந்தா: (பாட்டு)

"நாதவிந்து கலாதீ நமோ நமோ"

(என்ற திருப்புகழைப் பாடுகிறாள்.)

[பாக்கியலக்ஷ்மி மெதுவாக வந்து பாட்டை கவனிக்கிறாள். பாட்டு முடிந்ததும் பேசத் தொடங்குகிறாள். அவளுக்கு சுமார் இருபது வயது இருக்கும்.]

பாக்கியலக்ஷ்மி: அம்மா, நீங்கள் ஆத்மாநந்த சாமிகளின் ஆச்ரமத்தில் இருக்கிறீர்களல்லவா?

வசந்தா: ஆமாம், நீ யார்?

பாக்யலக்ஷ்மி : நான் இந்தப் பழநி நகரிலே மேல் கோடியில் வசிப்பவள்—. என் பெயர் பாக்யலக்ஷ்மி. பெயர்தான் பாக்யலக்ஷ்மி; ஆனால் உண்மையிலே நான் ஒருவிதமான பாக்கியமும் செய்தவளல்ல.

வசந்தா : நான் ஆச்ரமத்திலே இருப்பது உனக்கு எப்படித் தெரியும்?

பாக்யலக்ஷ்மி : நான் அங்கு நேற்று வந்திருந்த போது நீங்கள் மெய்மறந்து பாடிக் கொண்டிருந்ததைக் கேட்டேன். அதிலிருந்து உங்களைச் சந்தித்துப் பேச வேண்டுமென்று ஆவல் கொண்டேன். இங்கே கோயில் கொண்டிருக்கும் முருகனே இன்று என் ஆவலைப் பூர்த்தி செய்திருக்கிறார்.

வசந்தா : நீ இந்தக் கோயிலுக்கு நாள்தோறும் வருவதுண்டோ?

பாக்யலக்ஷ்மி : எனக்கு வேறு கதி ஏது? முருகனை நம்பியே இப்பொழுது நான் என் உயிரை வைத்துக் கொண்டிருக்கிறேன். அவரைத் தினமும் தரிசிப்பதால் எனக்கு ஒருவாறு மன அமைதி கிடைக்கிறது. திக்கற்ற வர்களுக்குத் தெய்வந்தான் துணை.

வசந்தா : பாக்யலக்ஷ்மி, நீ ஏதோ தீராத மனத் துயரத்தால் வாடுவதுபோலத் தெரிகிறது. என்னால் உனக்கு ஏதாவது உதவி புரிய முடியுமானால் நிச்சயமாகச் செய்வேன்.

பாக்யலக்ஷ்மி : உங்களுடைய ஆலோசனையை நாடித் தான் ஆவலோடு வந்திருக்கிறேன். அதனாலேயே கடவுளை நினைத்து நீங்கள் துதி பாடுவதைக்கூடக் கவனிக் காமல் குறுக்கிட்டுப் பேசினேன். மன்னிக்க வேண்டும்.

வசந்தா : பாக்யலக்ஷ்மி, நீ என்னை உன்னுடைய சொந்த சகோதரியாக நினைத்துக்கொள். உனக்கு ஏற்பட்

டிருக்கும் துன்பத்தை என்னிடம் தாராளமாகச் சொல்ல லாம். பிறருக்கு உபகாரமாக ஏதாவது சேவை செய்ய வேண்டுமென்பது எனது ஆவல்.

பாக்யலக்ஷ்மி : உங்களை நான் சரியாக அறியாவிட் டாலும் என்னுடைய குறைகளை உங்களிடம் சொல்லு வதில் தடையொன்றுமில்லை. துறவிகளைப் போல ஆச்ர மத்தில் நீங்கள் வசிக்கிறீர்கள். அதுவே எனக்குத் தைரியம் கொடுக்கிறது. அதோடு உங்களுடைய பாட்டு என் உள்ளத்தைக் கவருகிறது. அதிலே எனக்கு ஒரு அமைதி கிடைக்கிறது.

வசந்தா : நீ விஷயத்தைச் சொல்லாமல் சும்மா வேறு ஏதோ பேசிக் கொண்டிருக்கிறாயே?

பாக்யலக்ஷ்மி : இந்த இடத்திலே பலபேரும் வந்து போய்க் கொண்டிருக்கிறார்கள். அதனால் எனக்குக் கொஞ்சம் தயக்கமாக இருக்கிறது. உங்களோடு ஆச்ர மத்திற்கு வந்து அங்கே சொல்ல நினைக்கிறேன்.

வசந்தா : சரி, அப்படியே உன்னிஷ்டப்படி செய். ஆச்ரமத்திற்குப் புறப்படலாமா?

பாக்யலக்ஷ்மி : எனக்கொன்றும் அப்படி அவசர மில்லை. நன்றாக முருகனைத் தொழுதுவிட்டுச் செல்லு வோம். நீங்கள் இன்னும் ஒரு பாட்டுப் பாடினால் எனக்கு மன நிம்மதி ஏற்படும். முருகனுடைய சந்நிதிக்குப் போகலாமா?

வசந்தா : வா, முருகனைத் தரிசித்துக்கொண்டே பாடுகிறேன். பிறகு ஆச்ரமத்திற்குப் போவோம்.

[இருவரும் சந்நிதியை நோக்கிப் புறப்படுகிறார்கள்.]

திரை

## காட்சி மூன்று

[இரவு எட்டு மணியிருக்கும். சாது ஆத்மாநந்தர் ஆச்ரமம். வசந்தாவும் பாக்யலக்ஷ்மியும் பேசிக் கொண்டே உள்ளே வருகிறார்கள்.]

பாக்கியலக்ஷ்மி : அம்மா, இந்த ஆச்ரமம் மிகப் புனிதமானது. இதற்குள் நுழைந்தாலே ஒரு சாந்தி உண்டாகிறது.

வசந்தா : பாக்யலக்ஷ்மி, இனிமேல் நீ என்னை அக்கா என்றுதான் அழைக்கவேண்டும். நான் உன் சகோதரியாகவே இருந்து உனக்கு உதவி செய்வேன்.

பாக்யலக்ஷ்மி: நீங்கள் என்றுமே இங்கேயே இருப்பீர்களா?

வசந்தா : அதுதான் என்னுடைய தீர்மானம். பட்டணத்து வாழ்க்கையும் அதன் பரபரப்பும் எனக்கு அலுத்துப் போய்விட்டது. சரி—உன்னுடைய விஷயத்தைச் சொல். உன் வீட்டிலே எல்லோரும் சௌக்கியந்தானே?

பாக்யலக்ஷ்மி : வீட்டிலே நாங்கள் இரண்டு பேர் தான். நானும் என் கணவரும்—அவர் சௌக்கியமாகத் தான் இருக்கிறார்......ஆனால்...

[அதற்குமேல் பேசத் தயங்குகிறாள். பெருமூச் செறிகிறாள்.]

வசந்தா : அவரால்தான் உனக்கு இத்தனை கவலை ஏற்பட்டிருக்கிறதா? புருஷர்களே அப்படித்தான்.

பாக்யலக்ஷ்மி : அவர்மேல் குறை சொல்ல எனக்குக் கொஞ்சங்கூட மனமில்லை. அவரைப் பற்றிக் குறை சொல்லி யாரிடத்திலும் நான் இதுவரையில் பேசியது கிடையாது. என்னைப் பெற்றெடுத்த தாய் இங்கிருந்து இருபத்தைந்து மைல் தூரத்திலே தனியாக ஒரு கிராமத்

திலே வசித்து வருகிறுள். அவளிடம்கூட நான் எதுவும் சொன்னதில்லை.

வசந்தா : அப்படியென்ன சொல்ல முடியாத ரகசியம்?

பாக்யலக்ஷ்மி : கொண்ட கணவன்மேல் குற்றம் சொல்லுவது பாவம் என்று நான் நினைக்கிறேன். இருந் தாலும் எனக்கு இன்று வேறு வழி தெரியவில்லை. கடவுளைப்பற்றியே நினைத்துக்கொண்டிருக்கும் உங்க ளிடம் சொன்னுல் தவருகாது என்றுதான் கொஞ்சம் தைரியம் வந்திருக்கிறது.

வசந்தா : விஷயத்தை நேராகச் சொல்லுவதற்கு இப்படித் தயங்குகிருயே? வீட்டிற்குப் போக உனக்கு நேரமாகவில்லையா? இருட்டி வெகு நேரமாகிவிட்ட தென்று உன் புருஷன் கோபித்துக்கொள்ள மாட்டாரா?

பாக்யலக்ஷ்மி : அக்கா, நீங்கள் அவசரப்படுகிறீர்கள். ஆனுல், சொல்லலாமா வேண்டாமா என்று இன்னமும் என் மனம் ஊசலாடுகிறது. நேரமாகிறதென்பதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. அவர் வீடு வந்து சேர் வதற்கு இன்னம் ரொம்ப நேரமாகும். இரவே வீடு திரும்புவார் என்பதுகூடச் சொல்ல முடியாது.

வசந்தா : என்ன? வீட்டிற்கே திரும்பமாட்டாரா? அப்படி என்ன அவருக்கு வேலை?

பாக்யலக்ஷ்மி : அதுதான் அக்கா என் துன்பத்திற் கெல்லாம் காரணம். ஆபீஸ் வேலையை முடித்துக் கொண்டு சாயங்காலம் ஐந்து மணிக்கு வருவார்— வந்ததும் அவசரம் அவசரமாகப் பலகாரம் சாப்பிட்டு விட்டுப்புறப்பட்டுவிடுவார். பிறகு எங்கே சுற்றுகிருரோ— கடவுளுக்குத்தான் வெளிச்சம். ஊரிலுள்ளவர்கள் என் னென்னவோ பேசுகிருர்கள்.

வசந்தா: உன் புருஷன் அப்படிப்பட்டவரா? கை தொட்டுத் தாலிகட்டிய உன்னைப் புறக்கணித்துவிட்டு ஊரெல்லாம் சுற்றிக் கொண்டிருக்கிறாரா?

பாக்யலக்ஷ்மி: அவர்மேல் குற்றம் சொல்ல எனக்கு ஆசை இல்லை எல்லாம் என் தலைவிதி—அவரை அப்படித் திரியும்படி செய்கிறது.

வசந்தா: தலைவிதியா? தலைவிதியாவது மண்ணாவது. எல்லாம் உன்னுடைய பலஹீனத்தினால் வந்த கேடு தான் என்று நான் சொல்லுவேன். நீ அவருக்கு அடங்கி இப்படித் துன்பப்பட்டுக் கொண்டிருக்கக்கூடாது.

பாக்யலக்ஷ்மி: நான் என்ன செய்ய முடியும்? அவருடைய நடத்தைக்கு ஆபீஸ் சம்பளமும் போதுவ தில்லை. கடன் வாங்கிச் செலவு செய்துவிட்டு இப் பொழுது கடன்காரர் தொல்லையும் சேர்ந்துகொண்டது. என்னுடைய நகைகளையெல்லாம்......

வசந்தா: உன்னிடமிருந்து பிடுங்கிக் கொண்டு போய்ப் பரத்தையருக்குக் கொடுத்துவிட்டான்—அது தானே சொல்லப் போகிறாய்?

பாக்யலக்ஷ்மி: அவர் ஒன்றும் பிடுங்கிக்கொண்டு போகவில்லை. நானே இஷ்டப்பட்டுத்தான் கொடுத்து விட்டேன். அவர் சந்தோஷமாக இருப்பதில்தான் எனக்கு ஆசை.

வசந்தா: பாக்யலக்ஷ்மி, நீ ஒரு சுத்தப் பைத்தியம். உனக்குத் துரோகம் செய்யும் புருஷனுக்கு நீ இப்படி அடிமையாக இருக்கலாமா? நான் சொல்லுவதைக் கேள்—இனிமேல் நீ அவனுடன் வாழ்க்கை நடத்தக் கூடாது. இன்றே இங்கே வந்து என்னோடு இருந்துவிடு. உன்னை நான் கவனித்துக் கொள்ளுகிறேன்.

பாக்யலக்ஷ்மி: அக்கா, என்னை நீங்கள் சரியாக அறிந்துகொள்ளவில்லை. நான் என் கணவரை விட்டுப் பிரிந்து வாழ ஒருநாளும் விரும்பமாட்டேன். அவரை எப்படியாவது நல்ல வழிக்குத் திருப்ப வேண்டுமென்பது தான் எனது ஆசை. அதற்கு நீங்கள் உதவி செய்ய வேண்டும். அவரைவிட்டுப் பிரிந்து எனக்கு வாழ்க்கை யேது?

வசந்தா: நீ சொல்லுவது எனக்கு வியப்பாக இருக்கிறது. உன்னைக் கவனியாத புருஷனிடத்திலே நீ இவ்வளவு அன்பும் மரியாதையும் வைத்திருக்கிறாயே?

பாக்யலக்ஷ்மி: அக்கா, உங்களிடத்தில் ஒளிக்காமல் சொல்லுகிறேன். அவர்தான் எனக்குத் தெய்வம். அவர் எவ்வளவு ஒழுங்கீனமாக நடந்து கொண்டாலும் என் மனம் அவரை வெறுக்காது. அவருக்கும் என்னிடத்திலே அன்பில்லாமல் இல்லை. அவர் என்னோடு சில நாட்கள் இன்முகமாய்ச் சிரித்துப் பேசும்போது எனக்கு உலகமே சொர்க்க லோகமாய்த் தெரிகிறது.

வசந்தா: உன்னோடு சிரித்துப் பேசி உன்னை ஏமாற்றி நகைகளை வாங்கிக்கொண்டு போகிறானுக்கும். அதுதானே ரகசியம்?

பாக்யலக்ஷ்மி: அவர் என்னை ஏமாற்றுவதாக நான் நினைக்கவில்லை. எப்படியோ இந்த பலஹீனம் அவரிடத்திலே இருக்கிறது. அதைச் சில சமயங்களில் உணர்ந்து உண்மையாக வருத்தப்படுகிறார். ஆனால், மறுபடியும் அவர் தமது பலஹீனத்தின் அடிமையாகிவிடுகிறார்.

வசந்தா: (சற்று வெறுப்போடு) அதற்கு இப்பொழுது என்னை என்ன செய்யச் சொல்லுகிறாய்? உனக்கு அவனை விட்டுவர இஷ்டமில்லையென்றால் இப்படியே அடிமையாகக் கிடந்து சாக வேண்டியதான்.

பாக்யலக்ஷ்மி: அக்கா, கோபித்துக் கொள்ளாதீர்கள். நான் ஒரு கிராமாந்திரப் பெண். எனக்கு விஷயத்தை நன்றாகவும் தெளிவாகவும் எடுத்துச் சொல்லத் தெரியாது. ஏதோ வாய்க்கு வந்தபடி சொல்லுகிறேன்.

வசந்தா: எனக்கு உன்னிடம் கோபம் ஒன்றுமில்லை. ஆனால், இப்படிப்பட்ட புருஷனிடத்திலே இன்னும் மாறாத காதல் கொண்டிருக்கிறாயே என்பதை நினைத்தால் ஆத்திரந்தான் வருகிறது. நீ உடனே அவனை விட்டு விலகி வந்துவிடுவதுதான் சரியென்பது என் கருத்து.

பாக்கியலக்ஷ்மி: அவரைப் பிரிந்து வருவதை நான் கனவிலும் கருதமாட்டேன். எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது......அக்கா, நாளைக்கு அவரை எப்படியாவது ஆச்ரமத்திற்கு அழைத்து வருகிறேன். அவருக்கு அறிவு திருந்தும்படி பக்குவமாக ஏதாவது சொல்லுங்கள்; அப்படியே மெதுவாக சாது ஆத்மாநந்தரிடம் பழகும்படி செய்யுங்கள். இந்த உதவியைத்தான் உங்களிடம் எதிர்பார்க்கிறேன்.

வசந்தா: ஏன், சாதுவிடமே நேராக அழைத்துச் செல்வதுதானே? நான் எதற்கு மத்தியிலே?

பாக்யலக்ஷ்மி: துறவிகள் என்றால் அவருக்குப் பிடிப்பதில்லை. அவர்களிடம் துளிகூட நம்பிக்கை கிடையாது. ஆனால், அவருக்குத் தெய்வ நம்பிக்கை இல்லாமலில்லை. சிறு வயதிலேயே இவ்வளவு தெய்வ பக்தியில் ஈடுபட்டுள்ள உங்களைப் பார்த்ததிலிருந்து நீங்கள் சொன்னால் அவருக்கு மனம் திருந்தும் என்று எனக்குத் தோன்றுகிறது. அடிக்கடி இந்த ஆச்ரமத்திற்கு அவர் வந்து சாதுவின் உபதேசங்களைக் கேட்கும்படி செய்துவிட்டால் போதும்.

வசந்தா : சரி; நாளைக்கு அவரை அழைத்துவா. உன் விருப்பப்படியே அவனிடம் பேசுகிறேன்.

பாக்யலக்ஷ்மி : அக்கா, இதிலே உங்கள் உதவியைத் தான் நான் முழுதும் நம்பியிருக்கிறேன். நான் போய் வரட்டுமா?

வசந்தா : சரி, போய்வா; எனக்கும் நேரமாகிறது. நாளைக்கு அவசியம் உன் கணவனைக் கூட்டிக் கொண்டுவா.

[பாக்யலக்ஷ்மி புறப்படுகிறாள்.]

திரை

## காட்சி நான்கு

[இரவு ஒன்பது மணி. சாது ஆத்மாநந்தர் தமது அறையில் ஓர் ஆசனத்தில் அமர்ந்திருக்கிறார். வசந்தா வேகமாக வருகிறாள்.]

வசந்தா : சுவாமி, உங்களுக்குத் தீர்க்க தரிசனம் உண்டென்று இன்றுதான் தெரிந்தது.

சாது : வசந்தா, உள்ளே நுழைந்ததும் ஏதோ புதிர் போடுகிறாயே? என்ன விஷயம்?

வசந்தா : சேவை செய்வதற்குச் சந்தர்ப்பம் கோயிலிலே காத்துக் கொண்டிருக்கும் என்று சொன்னீர்களே—அது உண்மையாகிவிட்டது.

சாது : பாக்கியலக்ஷ்மி உன்னிடம் வந்தாளா?

வசந்தா : அந்தப் பெண்ணினுடைய பெயர் உங்களுக்கு எப்படித் தெரியும்?

சாது : நான்தான் அவளை இன்று மாலை உன்னைக் கோயிலில் சந்திக்கும்படி கூறினேன். நேற்று அவள் என்னைக் காண வந்திருந்தாள்,

வசந்தா : ஓகோ, இந்த விஷயம் உங்களுக்கு முன்பே தெரியுமா?

சாது : ஓரளவு தெரிந்து கொண்டிருக்கிறேன். நீ அவளுக்கு உதவி செய்யச் சம்மதித்தாயல்லவா?

வசந்தா : அவள் விஷயம் என்னை ரொம்பவும் கவர்ந்திருக்கிறது. பாக்யலக்ஷ்மிக்கு எவ்வகையிலும் உதவி செய்ய வேண்டுமென்று எனக்கு உற்சாகமேற்பட்டிருக்கிறது. புருஷனை அழைத்துக்கொண்டு நாளைக்கு வரும்படி அவளிடம் சொல்லியிருக்கிறேன்.

சாது : அவரை எதற்கு அழைத்துவரச் சொன்னாய்? உனது சேவையைப் பெண்கள் அளவிற்கு வைத்துக் கொண்டால் நல்லது. ஆண்களுக்குப் புத்தி சொல்லும் அளவிற்கு இறங்கிவிடாதே.

வசந்தா : ஏன், ஆண்களென்றால் அவ்வளவு உயர்வோ? பெண்கள் அவர்களுக்குப் புத்தி சொல்லத் தகுதியற்றவர்களா?

சாது : வசந்தா, ஏன் இப்படி அவசரப்பட்டு முடிவுகள் செய்கிறாய்? உனக்கு உலக அனுபவம் நன்கு ஏற்படும்வரை சேவையை ஒரு வரம்பிற்குள் வைத்துக் கொள்ளுவதுதான் நல்லதென்று சொன்னேன்.

வசந்தா : சுவாமி, அதை நான் கவனித்துக்கொள்கிறேன். இப்பொழுது நீங்கள் காலையில் எழுதிய அந்தப் பாட்டை ஒரு தடவை பாடிக் காண்பியுங்கள். அது எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது.

சாது : காலையிலே எழுதிக் கொண்டாயல்லவா?

வசந்தா : ஆமாம்; இன்னொரு தடவை பாடிக் காண்பித்துவிட்டால் அந்த மெட்டு நன்றாக மனதில் பதிந்துவிடும்; அதற்காகத்தான் கேட்கிறேன்.

சாது: பாட்டின் கருத்தை நீ புரிந்துகொண்டாயா?

வசந்தா: சுவாமி, ஒரு வேடிக்கையான சம்பவம் சொல்லட்டுமா?

சாது: என்ன வேடிக்கை?

வசந்தா: நான் பாக்யலக்ஷ்மியை அழைத்துக் கொண்டு ஆச்ரமத்திற்கு வரும்போது அவளுடைய புருஷன் பெயர் என்னவென்று கேட்டேன்—அவள் சொல்லுவதற்கே மறுத்துவிட்டாள். சுத்தப் பட்டிக் காட்டுப் பெண்.

சாது: ஆமாம், என்னைப் பாடச் சொல்லிவிட்டு அந்த சம்பவத்தைத்தான் நினைத்துக்கொண்டிருந்தாயா?

வசந்தா: அதை என்னால் மறக்க முடியவில்லை. சுவாமி.

சாது: சீர்திருத்தம் செய்யப் போகிறவர்கள் அதையே சதா நினைத்துக் கொண்டிருக்கக்கூடாது. அப்படி நினைத்துக் கொண்டிருந்தால் மனதில் தெளிவு ஏற்படாமல் தவறு செய்ய நேரிடும்.

வசந்தா: அவள் புருஷன் பெயர் உங்களுக்குத் தெரியுமா?

சாது: நான் என்ன சொன்னாலும் உனக்கு ஞாபக மெல்லாம் பாக்யலக்ஷ்மியின்மேல்தான் இருக்கிறது— சரி......அவள் கணவன் பெயர் தாமோதரன்.

வசந்தா: தாமோதரனா? — பெயர் என்னவாக இருந்தால் என்ன? நாளைக்கு வரட்டும் பார்க்கலாம்.

சாது. வந்தால் அவரிடம் என்ன சொல்லப் போகிறாய்?

வசந்தா: பெண்கள் குலத்தை இப்படிக் கேவலமாக நடத்துகிறவனிடம் என்ன பேசுவதென்று எனக்குத் தெரியும், சுவாமி.

சாது (சிரித்துக்கொண்டு): நீ தாமோதரனைச் சீர் திருத்தப் போகிறாயா அல்லது அவரோடு சண்டை போடப் போகிறாயா?

வசந்தா: ஏன், சண்டை போட்டால்தான் என்ன? நான் பாக்கியலக்ஷ்மியைப்போல அப்படி விஷயந் தெரியாதவளல்ல.

சாது: பாக்யலக்ஷ்மிக்கு ஒரு விஷயமும் தெரியா தென்று நீ நினைக்கக்கூடாது. அவளுக்குத் தெரிந்திருக்கும் ஒரு முக்கியமான விஷயம் உனக்குத் தெரியாது. வசந்தா" உன்னுடைய படிப்பிலே அது அடங்கியிருக்கவில்லை.

வசந்தா: அது அடங்கவே வேண்டாம். பாக்ய லக்ஷ்மியைப் போலப் பெண்கள் இருப்பதால்தான் ஆண்கள் எங்கள் தலைமேலே ஏறப் பார்க்கிறார்கள்—அந்த நிலைமையை இனிமேலும் சகிக்க முடியாது.

சாது: உன்னிடத்திலே வாதாடினால் உனக்கு ஆத்திரம் அதிகமாகும்—ஆழ்ந்து நிதானமாக யோசிக்கும் தன்மை மறைந்து போகும்.

வசந்தா: சுவாமி, என் மனத்தின் சக்தியைப்பற்றி நீங்கள் அவ்வளவு குறைவாக நினைக்க வேண்டாம்.

சாது (புன்முறுவல் செய்து கொண்டே): வசந்தா, பாக்யலக்ஷ்மிக்கு ஆறுதலாக ஏதாவது செய். அதை விட்டுவிட்டு அவன் புருஷனைச் சீர்திருத்தும் முயற்சியிலே நீ தீவிரமாக இறங்கிவிடாதே. அதனால் எதிர்பாராத தொந்தரவுகள்தானுண்டாகுமென்று எனக்குத் தோன்று கிறது.

வசந்தா: சுவாமி, அந்தப் பாட்டைப் பாடிக் காண்பிக்கிறீர்களா?

~~சாது: சரியம்மா, உன்னிஷ்டப்படியே பாடுகிறேன்.~~

திரை

## காட்சி ஐந்து

[தாமோதரன் இல்லம். மாலை சுமார் ஐந்து மணி. தாமோதரன் வெளியே புறப்படுவதற்காக ஆடை யுடுத்திக்கொண்டு அங்க வஸ்திரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறான். அந்த நிலையிலேயே பேசுகிறான். பாக்யலக்ஷ்மி சற்று விலகி நின்று கொண்டிருக்கிறாள்.]

**தாமோதரன் :** பாக்யலக்ஷ்மி, டீ தயாராகிவிட்டதா? எனக்கு நேரமாகிறது, வெளியே போகவேணும்.

**பாக்யலக்ஷ்மி :** இதோ கொண்டுவந்துவிட்டேன். நீங்கள் இப்பொழுது அவசியம் வெளியே போக வேண்டுமா?

**தாமோதரன் :** ஏன், ஏதாவது வேலை இருக்கிறதா?

**பாக்யலக்ஷ்மி :** இன்று ஆறு மணிக்கு சாது ஆத்மா நந்தர் ஆச்ரமத்திற்குப் போய் வரலாமென்று காலையிலே உங்களைக் கேட்டேனே?

**தாமோதரன் :** சாமியார் மடங்களுக்கெல்லாம் என்னால் வரமுடியாது. அவர்களுக்கு வேலையென்ன?

**பாக்யலக்ஷ்மி :** சாமியாரைப் பார்க்கும்படி நான் சொல்லவில்லையே? புதிதாக அங்கே ஒரு அம்மையார் வந்திருக்கிறார்கள். சிறு வயசிலேயே அவர்கள் அவ்வளவு பக்தி உடையவராகக் காணப்படுகிறார்கள். அவர் பாடும் போது எனக்குப் பரவசமாகிவிடுகிறது. அவரோடு கொஞ்சநேரம் பேசிக்கொண்டிருந்தாலும் உயர்ந்த எண்ணங்கள் நம் உள்ளத்திலே தோன்றும்.

**தாமோதரன் :** அது யாராக இருந்தாலும் நான் ஆச்ரமத்தில் போய்ப் பார்க்க மாட்டேன்.

**பாக்யலக்ஷ்மி :** என் ஆசையை இதில்கூட நிறைவேற்றக் கூடாதா?

தாமோதரன் : எனக்கு இன்றைக்கு ஒரு ஐம்பது ரூபாயாவது வேண்டும். எனது சிநேகிதன் ஒருவனுக்குக் கண்டிப்பாகப் பணம் கொடுப்பதாக வாக்களித்து விட்டேன். அதற்கு ஒன்றும் வகையில்லாமல் நான் திண்டாடிக் கொண்டிருக்கும்போது ஞானோபதேசம் யாருக்கு வேண்டும்?

பாக்யலக்ஷ்மி : என்னிடத்திலே இன்னும் ஒரு மோதிரம் பாக்கியிருக்கிறது. அதையும் வேண்டுமானால் எடுத்துக்கொள்ளுங்கள். ஆனால், இந்த என் ஒரு ஆசையை மட்டும் நீங்கள் மறுக்கக்கூடாது.

தாமோதரன் : ஆச்ரமத்திற்குப் போகாமல் வெளியில் எங்காவது சந்திக்க முடியாதா?

பாக்யலக்ஷ்மி : அவர்கள் ஆச்ரமத்தைவிட்டு வெளியில் எங்கேயும் வருவதில்லை. பாலதண்டாயுதபாணி கோயிலில் வேண்டுமானால் மாலைப் பூஜையின்போது பார்க்கலாம்.

தாமோதரன் : சரி, அங்கே போகலாம்—அவள் யார்—எங்கிருந்து வருகிறாள் என்பதெல்லாம் உனக்குத் தெரியுமா?

பாக்யலக்ஷ்மி : இனிமேல்தான் அவற்றையெல்லாம் விசாரிக்க வேண்டும். ஆனால், அவற்றைப்பற்றி நமக்கெதற்குத் தெரியவேணும்?

தாமோதரன் : இப்படி சாமியார் வேஷம் போடுகிறவர்களை யெல்லாம் கொஞ்சம் உஷாராகக் கவனிக்க வேண்டும்—அதற்காகத்தான் கேட்டேன்.

பாக்யலக்ஷ்மி : அவர் வேஷம் ஒன்றும் போடவில்லை ......யாராவது ஒருவர் வேஷம் போட்டு ஏமாற்றினால் எல்லோரையும் அப்படி நினைக்கலாமா? அந்த அம்மாள் நிறைந்த பக்தியுள்ளவர்கள்.

தாமோதரன்: சரி, இன்றைக்குப் பார்த்தால் விஷயம் தெரிந்து போகிறது. சிறுவயதென்று சொன்னாய்?

பாக்யலக்ஷ்மி: ஆமாம், நிறையப் படித்திருக்கிறார்கள். குடும்ப வாழ்க்கையே வேண்டாமென்று வெறுத்துத் துறவு பூண வந்திருக்கிறார்கள்.

தாமோதரன்: இருந்தாலும் சாதுக்களுடைய ஆச்ரமத்திலே ஏன் இருக்க வேணும்?

பாக்யலக்ஷ்மி: ஆத்மாநந்தர் ஒரு உயர்ந்த சாது; பழுத்த பழம்போல வயது நிறைந்தவர். அவர் பக்கத்திலே இருந்தாலும் நல்ல எண்ணங்கள் நமக்கு ஏற்படும்.

தாமோதரன்: ஆச்ரமத்திலே வேறு யாரும் இல்லையா?

பாக்யலக்ஷ்மி: வேறு யாரும் இல்லை. யாரையும் அவர் அங்கே தங்க அனுமதிப்பதுமில்லையாம்.

தாமோதரன்: பிறகு இவள் மாத்திரம் எப்படி அங்கிருக்கிறாள்? சரி, நேரில் பார்த்தால் எல்லாம் தெரிகிறது...ம்...அந்த மோதிரம் எங்கே?

பாக்யலக்ஷ்மி: இதோ கொண்டு வருகிறேன்.

*[உள்ளே போகிறாள். தாமோதரன் யோசனையோடு நாற்காலியில் உட்காருகிறான்.]*

திரை

## காட்சி ஆறு

*[சாது ஆத்மாநந்தரின் அறை. சாது ஆசனத்தில் அமர்ந்திருக்கிறார். வசந்தா உற்சாகமாக ஏதோ இராகத்தைப் பாடிக்கொண்டே நுழைகிறாள். மாலை நேரம்.]*

சாது: வசந்தா, மிக உற்சாகமாகப் பாடிக்கொண்டு வருகிறாயே, ஏதோ விசேஷமிருக்க வேண்டுமென்று நினைக்கிறேன்.

வசந்தா : நீங்கள்தான் ஜோஸ்யம் சொல்லுவதில் வல்லவரென்று முன்பே சொல்லிவிட்டேனே? அந்தத் தாமோதரனும் பாக்யலக்ஷ்மியும் எத்தனை தடவை இங்கு வந்திருக்கிறார்கள் தெரியுமா? சுவாமி—முன்பு ஆச்ரமத்திற்கு வருவதற்கே மறுத்தவன் இப்பொழுது தங்களையும் வந்து தரிசிக்கத் தயாராக இருக்கிறானாம்.

சாது (சிரித்து) : எல்லாம் உன்னுடைய உபதேசத்தின் பலன்தான் போலிருக்கிறது?

வசந்தா : அதை நினைக்க நினைக்க என் உள்ளம் அளவற்ற சந்தோஷமடைகிறது.

சாது : அதிருக்கட்டும்... தாமோதரன் தன்னுடைய நடவடிக்கையை மாற்றிக்கொண்டு விட்டாரா?

வசந்தா : அதைப்பற்றி நிச்சயமாகச் சொல்ல முடியாது. நெடுநாட் பழக்கம் அவ்வளவு சீக்கிரத்திலே மாறிவிடுமா? விரைவில் அவனைக் கெட்ட நடத்தையிலிருந்து மீட்டுவிடலாமென்று நான் நம்புகிறேன்!

சாது : நீ செய்கிற காரியம் அவருடைய மனத்தை மாற்றுவதற்கு வழியாகத் தெரியவில்லையே? உன்னிடமுள்ள சில நகைகளைக்கூட பாக்யலக்ஷ்மியிடம் கொடுத்து அவனுக்குக் கொடுக்கும்படி சொன்னாயாமே?

வசந்தா : ஆமாம்—அவள் தன் கணவனுக்குக் கொடுத்து அவனை மகிழ்விக்கத் தன்னிடம் ஒன்றுமில்லையே யென்று மிகவும் வருத்தப்பட்டாள். துறவியாக விரும்பும் எனக்கு நகைகள் எதற்கென்று நான் அவளுக்குச் சிலவற்றைக் கொடுத்துவிட்டேன்.

சாது : வசந்தா, இந்த மாதிரி செய்துதான் பாக்யலக்ஷ்மி அவர் மேலும் மேலும் கெட்ட வழியில் செல்லுவதற்கு இடம் தந்தாள். அவளுடைய ஆழ்ந்த காதலையும்

கபடமில்லாத மனப்பான்மையையும் நன்கு பயன் படுத்திக் கொண்டு அவர் அவளை ஏமாற்றி வருகிறார். இப்பொழுது நீயும் அதற்கு உடந்தையாக இருக்கிறாய். இந்த நிலைமையிலே அவரை மீட்பதெப்படி?

வசந்தா: சுவாமி, நான் நகைகளையெல்லாம் வாரிக் கொடுப்பதற்கு அவ்வளவு முட்டாளல்ல. ஆரம்பத்திலே போனால் போகிறதென்று சிலவற்றைக் கொடுத்தேன். அப்படிச் செய்தால்தான் பாக்யலக்ஷ்மியை என் பக்கம் திருப்ப முடியும். இப்பொழுது அவனைச் சீர்திருத்து வதற்கு ஒரு பெரிய அதிர்ச்சித் திட்டம் தயாரிக்கிறேன். அதனாலே நிச்சயம் நல்ல பயன் சீக்கிரத்திலே கிடைக்கப் போகிறது.

சாது: வசந்தா, பாக்யலக்ஷ்மிக்கு உதவிபுரியும் ஆர் வத்திலே நீ வரம்பு கடந்து போய்விடாதே. யாரைச் சீர் திருத்துவதென்றாலும், யாருக்கு உதவி புரிவதானாலும் சற்று விலகி நின்று காரியம் செய்தால்தான் அதனால் பயன் ஏற்படும். அவர்களோடு நெருங்கிய தொடர்பு வைத்துக்கொண்டால் அது பின்னால் சங்கடமாகத்தான் முடியும். இப்பொழுதே நான் உன்னை எச்சரிக்கிறேன்.

வசந்தா: நீங்கள் அதைப்பற்றிக் கவலைப்படவேண் டாம். எல்லாம் எனக்குத் தெரியும்.

சாது: தெரியுமானால் சந்தோஷம். நீ என்னுடைய பொறுப்பில் இருப்பதால் எச்சரிக்கை செய்வது எனது கடமை என்று நினைத்தேன்.

வசந்தா: சுவாமி, நீங்கள் சொல்லிக் கொடுத்த பாட்டைப் பாடிக் காண்பிக்கட்டுமா? எனக்கு அது பிடித் திருக்கிறது.

சாது (புன்முறுவலோடு): சரி, பாடு கேட்கலாம்

வசந்தா : (பாட்டு)

இராகம் : நாட்டைக்குறிஞ்சி தாளம் : ஆதி

பல்லவி

சாந்தியில்லாமல் சுகமுண்டோ மன
சஞ்சலம் தீராமல் இன்பமுண்டோ வாழ்வில் —(சாந்தி)

அநுபல்லவி

வேந்தனுய் உலகேழும் ஆணை செய் தாண்டாலும்
விண்ணகத்தே யுள்ள கற்பகம் கொண்டாலும் —(சாந்தி)

சரணம்

பேறுகள் யாவும் பெறும்தவம் செய்தாலும்
பெரும்புகழ் சேர்ந்திடும் அருந்திற லிருந்தாலும்
மாநிலாப் போகங்கள் வந்து குவிந்தாலும்
வளர்கலை ஞானங்கள் வாய்த்திருந்தாலுமே—(சாந்தி)

சுவாமி. பாட்டிலே உயர்ந்த கருத்திருக்கின்றது. மிக நல்ல பாட்டு. ஆனல், உங்கள் மனத்திலும் ஏதோ அமைதியில்லாதது போலத் தொனிக்கின்றதே? அதனுல் தான் இந்தப் பாட்டை எழுதியிருக்கிறீர்கள்.

சாது (புன்முறுவலோடு) : அப்படி ஒன்றும் இல்லை வசந்தா. இந்தக் கருத்துக்கள் திடீரென்று எப்படியோ உதயமாயின—பாடினேன்; அவ்வளவுதான்.

வசந்தா : நீங்கள் என்னிடமிருந்து விஷயத்தை மறைக்கப் பார்க்கிறீர்கள்.

சாது : ஒரு வேளை உன்னுடைய வேகமும், சேவை ஆர்வமும் என் மன அமைதியைச் சற்று மறைமுகமாகப் பாதித்திருக்கலாம். அதற்காகவே உன்னை எச்சரிக்கை செய்தேன்...இப்பொழுதும் செய்கிறேன்.

வசந்தா : சுவாமி, என்னைப்பற்றி நீங்கள் வீணுக வேலை கொள்ளாதீர்கள். நான் நிதானமாக ஆராய்ந்து முடிவுசெய்தே எனது திட்டத்தைத் தயாரித்திருக்கிறேன்.

அதிர்ச்சியில்லாமல் ஒரு கெட்ட பழக்கம் மாறாது. அது மனத் தத்துவம் கூறுகின்ற உண்மை. அதனால் அதையே நான் கடைப்பிடிக்கத் தீர்மானித்திருக்கிறேன்.

சாது : அந்தத் திட்டமே உனக்கும் மனமாற்றத்தைக் கொடுத்தால் நான் மகிழ்ச்சியடைவேன். ஆனால் உனக்குத் தீங்கு வராமல் காப்பது இன்று என் கடமையாக இருக்கிறது?

வசந்தா : உங்கள் கடமை உணர்ச்சியைக் கண்டு நான் உள்ளம் பூரிக்கிறேன். ஆனால் அதனால் உங்கள் மனச்சாந்தி கெட்டுப் போகாமல் பார்த்துக் கொள்ளுங்கள்.

சாது: சரி, வசந்தா. நான் மலைக்கோயிலுக்குச் சென்று வரட்டுமா? ஆச்ரமத்தில் நீ தனியாக இருக்கிறாய்...எல்லாம்...

வசந்தா: சுவாமி, நான் தனியாக இருப்பதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். நீங்கள் சென்று வாருங்கள்.

[சாது புறப்படுகிறார்.]

திரை

## காட்சி ஏழு

[இரவு ஒன்பது மணிக்கு மேலிருக்கும். வசந்தா தனது அறையிலிருந்து ஏதோ ஒரு இராகத்தை மெதுவாகப் பாடிக்கொண்டே ஒரு புத்தகத்தை எடுத்துப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். தாமோதரன் மெதுவாக வருகிறான். அவன் வருவதைச் சட்டென்று திரும்பி வசந்தா பார்க்கிறாள்.]

வசந்தா : யாரது? தாமோதரனா?

தாமோதரன் : ஆமாம், நான்தான்.

வசந்தா : எங்கே இந்த நேரத்திலே வந்தீர்கள்? இரவு மணி ஒன்பதுக்கு மேலாகிவிட்டதே?

தாமோதரன் : மலைக்கோயிலுக்குத் தரிசனத்திற்காகப் போயிருந்தேன். வரும் வழியில் இங்கே வந்து விட்டுப் போகலாமென்று நினைத்தேன்.

வசந்தா : பாக்யலக்ஷ்மி வரவில்லையா ?

தாமோதரன் : அவள் வரவில்லை; நான் மட்டும் தனியாக வந்தேன்.

வசந்தா : இரவு வேளையிலே இந்த ஆச்ரமத்தில் யாரையும் வர அனுமதிப்பது கிடையாது.

தாமோதரன் (இழுத்தாற் போல்) : அப்படியா? எனக்குத் தெரியாது. சுவாமியார் இன்றைக்கு மலையி லிருந்து வர வெகு நேரம் ஆகுமே, அதற்கு முன்னால் உங்களைப் பார்த்துப் போகலாமென்று வந்தேன்.

வசந்தா : நான் உங்களிடம் கூறிய வார்த்தைகளைப் பற்றிச் சிந்தித்துப் பார்த்தீர்களா?

தாமோதரன் : உங்களுடைய வார்த்தைகளை விடப் பாட்டுத்தான் என்னை அதிகம் கவர்கின்றது. அவைகள் சதா என் காதில் ஒலித்து இன்பமூட்டுகின்றன.

வசந்தா : நீங்கள் பாக்யலக்ஷ்மிக்குத் துரோகம் செய்ததை உணரவில்லையா?

தாமோதரன் : நான் அவளுக்கு ஒரு விதமான துரோகமும் செய்யவில்லையே? இளமையென்பது எப் பொழுதுமா இருக்கப்போகிறது? அதற்குள்ளே வாழ்க்கை இன்பத்தை யெல்லாம் அனுபவிக்க நாம் தெரிந்து கொள்ள வேண்டாமா?

வசந்தா : உங்கள் வார்த்தை எனக்குத் கொஞ்சமும் திருப்தியாய் இல்லை. பாக்யலக்ஷ்மி உங்களிடம் எவ்வளவு அன்பு கொண்டிருக்கிறாள் என்பதை நீங்கள் கொஞ்சமும் தெரிந்து கொள்ளவில்லை.

**தாமோதரன் :** அது எனக்கு நன்ருகத் தெரியும். அவள் என்னைத் தன்னுடைய தனி உரிமையாக நினைக்கிருள். அதுதான் எனக்குப் பிடிக்கவில்லை. ஆண்களுக்குச் சில விஷயங்களிலே சுதந்திரம் அதிகமாக வேண்டும்.

**வசந்தா :** சுதந்திரம் என்பது ஆண் பெண் இருவருக்கும் சரிசமமாக வேண்டியதுதான். ஆனல், நீங்கள் மேற்கொண்டிருப்பது சுதந்திரமல்ல. அது துரோகம்.

**தாமோதரன் :** வசந்தா, நீங்கள் கோபமாகக் கூறுகின்ற வார்த்தைகூட என் மனத்தைக் கவர்கின்றது. இந்தக் கோப வார்த்தைகளெல்லாம் என்னைப் பரிசோதிக்கக் கூறுகின்றவையென்று நான் கருதுகிறேன்.

**வசந்தா :** நான் ஒன்றும் பரிசோதனை செய்ய விரும்பவில்லை. நீங்கள் போகலாம். இந்த நேரத்திலே இங்கே வந்ததே சரியல்ல.

**தாமோதரன் :** நான் உங்களை முதல் தடவையாகப் பார்த்ததிலிருந்தே தனியாகச் சந்திக்க வேண்டுமென்று ஆவல் கொண்டேன். அன்று முதல் உங்கள் நினைவாகவே...

**வசந்தா :** தாமோதரன், உங்கள் பேச்சு வரம்பு கடந்து செல்லுகிறது. உடனே மரியாதையாக வெளியே போய்விட வேண்டும்.

**தாமோதரன்** (லேசாகச் சிரித்து) **:** உங்களைப்போல வீட்டைவிட்டு வெளியேறுகிறவர்கள் பலரைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். நீங்கள் இன்னமும் என்னைச் சோதிக்க வேண்டாம்.

**வசந்தா** (கோபம் பொங்க) **:** ஓகோ, அப்படியா நினைத்துக் கொண்டாய்? அயோக்கியனுக்கு உலகத்திலுள்ளவர்களெல்லாம் அயோக்கியராகத்தான் தெரியும்.

தாமோதரன்: வசந்தா, உங்களுக்கு என்மேல் அன்பு ஏற்பட்டிருப்பதை முதல் நாளே கண்டு கொண்டேன். இல்லாவிட்டால் அடிக்கடி என்னை இங்கே வந்து உங்களைப் பார்க்கும்படி சொல்லியனுப்புவீர்களா?

வசந்தா: நான் இங்கு உன்னை வரும்படி சொன்னால் அது உனக்காகவல்ல. பாக்யலக்ஷ்மிக்காகத்தான் உன்னை வரும்படி சொன்னேன்.

தாமோதரன்: அவளால்தானே என்னைத் தெரிந்து கொண்டீர்கள்? இப்போ அவளைப்பற்றி ஏன் நினைக்க வேண்டும்?

வசந்தா: தாமோதரன், இன்னும் நீ இங்கு நின்று கொண்டிருக்கக்கூடாது. உடனே வெளியே போக வேண்டும்.

தாமோதரன்: சும்மா வெளியே போவதற்கு நான் இங்கு வரவில்லை.

வசந்தா (கோபமாக): நீ ஒரு அயோக்கியன்—வெளியே போகிறாயா இல்லையா?

தாமோதரன்: அதிகம் பேச வேண்டாம். அப்படிப் பத்தினியாக இருந்தால் புருஷனைவிட்டுவிட்டு இங்கு எதற்கு வருகிறாய்?

வசந்தா: ஆமாம், நான் புருஷனைவிட்டு வந்ததாக யார் உனக்குச் சொன்னார்கள்? என் புருஷன் என் கூடவேதானிருக்கிறார்.

தாமோதரன்: புருஷன் கூடவே இருப்பதாகச் சொல்லி இப்போ என்னைப் பயமுறுத்தப் பார்க்கிறாயா?

வசந்தா: அப்படிப் பயமுறுத்த வேண்டிய அவசியமில்லை. என்னைக் காத்துக் கொள்ள வேறு யாரும் வேண்டியதில்லை—என்னாலேயே முடியும்.

தாமோதரன்: இந்தச் சமயத்திலே நான் உன்னை என்ன வேண்டுமானாலும் செய்ய முடியும்.

வசந்தா: அப்படிச் சொல்லித்தான் என் புருஷன் பாக்கியலக்ஷ்மியை ஏமாற்றினார். நான் பாக்கியலக்ஷ்மி அல்ல.

தாமோதரன்: என் விருப்பத்திற்கு இணங்காவிட்டால் உன்னைப்பற்றி ஊரெல்லாம் சிரிக்கும்படி செய்து விடுவேன்.

வசந்தா: உன்னைப்பற்றித்தான் இன்று ஊரெல்லாம் சிரிக்கிறது.

தாமோதரன்: அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. உன்னையும் சேர்த்துச் சிரிக்க வைக்க வேண்டுமா?

வசந்தா: அடே, இதுவரை வெளிப்படையாகச் சொல்ல வேண்டாமென்று நினைத்தேன். நீ வரம்புமீறிப் போகிறபடியால் நான் ஒன்றும் மறைக்கப் போவதில்லை, இதுவரையில் உன்னைப்பற்றித்தான் ஊரார் சிரித்தார்கள். இன்றைக்கு உன் மனைவியையும் சேர்த்துச் சிரிப்பதை அறியாமல் நீ மமதை கொண்டு திரிகிறாய்.

தாமோதரன்: பாக்யலக்ஷ்மியைப் பற்றி யாரும் ஒன்றும் சொல்லத் துணியமாட்டார்கள். நீ சொல்லுவது வெறும் புரளி.

வசந்தா: உலகத்திலே உன் மனைவி மாத்திரம் கற்பரசி என்று நீ மண்டைக் கர்வம் பிடித்து அலைகிறாய். அவள் புதிது புதிதாக உனக்கு நகைகள் கொடுக்கிறாளே —அவை எப்படி வருகின்றனவென்று நீ யோசித்துப் பார்த்தாயா? காமுகனுக்கு அதற்கெல்லாம் நேரமெங்கே?

தாமோதரன்: நகையெல்லாம் அவளுடையது தான்...

வசந்தா (ஏளனமாக நகைத்து): மூன்று நாட்களுக்கு முன்னாலே ஒரு முத்துப் பதக்கம் கொடுத்தானே அது அவளுடையதா? என்றைக்காவது அவள் அதை அணிந்திருந்ததை நீ பார்த்திருக்கிறாயா?

தாமோதரன்: முத்துப் பதக்கம் எனக்குக் கொடுத்தது உனக்கெப்படித் தெரியும்?

வசந்தா: எப்படித் தெரியுமா? கொடுத்தவர் என் கணவர்தானே? அவரும் உன்னைப்போல யோக்கியதை உடையவர்தான்.

[ஏளனக் குறிப்போடு சிரிக்கிறாள்]

தாமோதரன்: ஆ. அப்படியா? அதனால்தான் அவன் தினமும் இங்கே வருகிறானா? வசந்தா, நீ பாக்யலக்ஷ்மியின் மேல் வீண்பழி சுமத்தப் பார்க்கிறாய்...இது நிஜமாக இருந்தால்...நான் அவளை உத்தம பத்தினியென்றல்லவா நினைத்துக்கொண்டிருக்கிறேன்?

வசந்தா: இன்னும் உனக்கு அத்தாட்சி வேண்டுமானால் இதோ இந்தப் பச்சை மோதிரத்தை நன்றாகக் கவனித்துப் பார்த்துக்கொள். இரண்டு நாள் கழித்து பாக்யலக்ஷ்மியிடம் ஏதாவது செலவுக்குக் கேட்டுப் பார். அவள் இதையே உனக்குக் கொடுக்கப் போகிறாள்.

தாமோதரன்: நிஜமாகவா?

வசந்தா: நிஜம் பொய்யெல்லாம் இரண்டு நாளில் தெரிந்து போகிறது.

தாமோதரன்: உன் கணவனா அந்த அயோக்கியன்? அவன் இப்பொழுது எங்கேயிருக்கிறான்?

வசந்தா: இங்கேதான் இருக்கிறார்—இன்றைக்கு ஆத்மாநந்தரோடு மலைக்குப் போயிருக்கிறார். அங்கே நீ

கவனிக்கவில்லையா? உன் கண்களிலே ஆண்கள் எங்கே தென்படுகிறார்கள்?

தாமோதரன் : வசந்தா, நீ சொல்லுவது நிஜந்தானா என்று தெரிந்துகொண்டு பிறகு பார்த்துக் கொள்ளுகிறேன். என் உள்ளம் கோபத்தால் வெடித்து விடும் போலிருக்கிறது......ஆகா—இப்படியா விஷயம் இருக்கிறது? நீ இங்கே தனியாக வந்திருப்பதாகச் சொன்னது என்னை ஏமாற்றவா?

வசந்தா : உன் மனைவி யோக்கியமாக இருந்தால் போதும்—மற்றவர்கள் உன்னிஷ்டம்போல் எப்படி வேண்டுமானாலும் இருக்கவேண்டும். அதுதானே உன்னுடைய நினைப்பு? நீ ஊரெல்லாம் சுற்றிக்கொண்டிருந்தால் உன்மீது பழி வாங்கவே அவள் இப்படி ஆரம்பித்திருக்கிறாள்.

[மறுபடியும் ஏளனமாகச் சிரிக்கிறாள்.]

தாமோதரன் : உன்னுடைய உபதேசமா அது? வசந்தா, பொறு, இன்னும் இரண்டு நாள் கழித்து உனக்குப் பதில் சொல்லுகிறேன். உன்னுடைய வார்த்தை உண்மையா என்று நிச்சயமாகத் தெரிந்துகொண்டு பிறகு பேசுகிறேன்.

[ஆத்திரத்தோடு வெளியே புறப்படுகிறான்.]

வசந்தா : மோதிரத்தை நன்றாகப் பார்த்துக் கொண்டு போ. நல்ல பச்சைக்கல் மோதிரம்.

[தாமோதரன் அவளை ஒரு தடவை ஏறிட்டுப் பார்க்கிறான். மோதிரத்தையும் பார்க்கிறான். பிறகு கோபமாக வெளியே போகிறான். வசந்தா தனது திட்டம் வெற்றிகரமாகத் தொடங்கி விட்டதென்று புன்முறுவலோடு நிற்கிறாள்.]

திரை

# அங்கம் இரண்டு

## காட்சி ஒன்று

[மறுநாள் அதிகாலை. சாது ஆத்மாநந்தர் தனியாகத் தமது அறையில் அமர்ந்து பாடிக் கொண்டிருக்கிறார்.]

சாது : (பாட்டு)

காகங்கரைந்தது காலையு மாயிற்று
கண்மணி முருகனே வாவா
என்மன ஜோதியே வாவா

கோழிகள் கூவின கோகிலம் கூவின
கோலக் குமரனே வாவா
ஞாலத் தலைவனே வாவா

ஞாயிறு தோன்றிற்று ஞாலம் விழித்தது
ஞானப்ர காசனே வாவா
தீன தயாளனே வாவா

பொழுது புலர்ந்தது பொற்கதிர் வீசின
புண்ணிய ரூபனே வாவா
கண்ணிய ரூபனே வாவா

மலர்கள் விரிந்தன வண்டுகள் பாடின
மாணிக்க வேலனே வாவா
காணற் கரியனே வாவா

[வசந்தா அவசரமாக உள்ளே நுழைகிறாள்.]

வசந்தா : சுவாமி, உங்களிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டுமென்று ஓடிவந்தேன்.

சாது : காலையில் எழுந்து இன்னும் ஸ்நானம்கூடச் செய்யவில்லை போலிருக்கிறதே?

வசந்தா: நேற்று இரவு நடந்த சம்பவங்களால் எனக்கு வெகு நேரம் உறக்கம் வரவில்லை. மேலும் அதி காலையில் எழுந்திருப்பதென்றால் எனக்குக் கஷ்டமாக இருக்கிறது.

சாது: இதுவே கஷ்டமென்றால் பிறகு துறவு பூணுவ தெப்படி? ஆமாம், நேற்று இரவு ஏதோ நடந்ததாகச் சொன்னாயே, என்ன அது?

வசந்தா: சுவாமி, அந்தத் தாமோதரன் நீங்கள் மலைக்குச் சென்ற சமயத்தில் இங்கே வந்திருந்தான்.

சாது (கவலை படர்ந்த முகத்தோடு): தாமோதரனா? அந்நேரத்தில் அவர் எதற்கு வந்தார்? பாக்யலக்ஷ்மிகூட வந்திருந்தாளா?

வசந்தா (வெற்றிப் புன்முறுவலோடு): அவன் தனி யாகத்தான் வந்தான். நான் அவனுக்குச் சரியான அதிர்ச்சி மருந்து கொடுத்து அனுப்பியிருக்கிறேன்.

சாது: வசந்தா, தாமோதரனுடைய நடத்தை சரி யில்லை என்பது உனக்குத் தெரியுமல்லமா?

வசந்தா: ஆமாம் சுவாமி, அது எனக்குத் தெரியும். ஆனால், அவனுடைய கைவரிசை என்னிடமா செல்லும்?

சாது: என்ன இருந்தாலும் நீ ஒரு இளம்பெண், வீணாகப் பழி ஏற்பட்டுவிடும்.

வசந்தா: சுவாமி, அதைப்பற்றி நீங்கள் கவலைப் படவே வேண்டாம். என்னுடைய அதிர்ச்சித் திட்டம் வேலை செய்ய ஆரம்பித்துவிட்டது. அதைத் தொடங்குவ தெப்படி என்று நான் யோசித்துக் கொண்டிருக்கும் போது அவனே அதற்கு வழி காண்பித்துவிட்டான்.

சாது: தாமோதரன் இங்கு வந்துபோன விஷயத்தை எனக்கு இரவிலேயே ஏன் சொல்லவில்லை? மலையிலிருந்து நான் வந்தவுடனே சொல்லியிருக்கவேண்டுமே?

வசந்தா: அப்பொழுதே சொல்லி உங்களுக்கும் அதிர்ச்சியை உண்டாக்க விரும்பவில்லை.

சாது: வசந்தா என்ன இருந்தாலும் இது எனக்குத் திருப்தியாகப் படவில்லை.

வசந்தா: சுவாமி, இன்னும் இரண்டு நாள் பொறுத்துக் கொள்ளுங்கள். பிறகு எல்லாம் சரியாகிவிடும்.

சாது: உன்னுடைய நலத்திற்கும், நல்ல பெயருக்கும் நான் இன்று பொறுப்பாளி. அதனால்தான் எனக்குக் கவலையுண்டாகிறது.

வசந்தா: நான் என்னைக் காப்பாற்றிக் கொள்ளுவேன், அதற்கு எனக்குத் தைரியமுண்டு.

சாது: படித்த பெண்களிடத்திலே இந்தத் தைரியமேற்பட்டிருக்கிறதை நான் வரவேற்கிறேன். ஆனால், மற்றவர்களுடைய வியவகாரங்களில் அனாவசியமாகத் தலையிட்டிருக்கிறாயே, அதுதான் எனக்குச் சம்மதமில்லை, இவ்வாறு செய்தால் நான் உன்னைப் பட்டணத்திற்கு அனுப்பவேண்டி வரும்.

வசந்தா: பட்டணத்திற்கா? அது எப்படி முடியும், சுவாமி? நீங்கள் என்னைப் பட்டணத்திற்கு அனுப்ப நினைத்தால் நான் எங்காவது போய்விடுகிறேன்.

சாது: இல்லை, வசந்தா. ஏதோ மனக்கலவரத்தால் அப்படிக் கூறிவிட்டேன். நீ ஆச்ரமத்திலேயே இரு. ஆமாம், உன்னுடைய அதிர்ச்சித் திட்டம் என்னவென்று எனக்குக் கூறவில்லையே?

வசந்தா : உங்களுக்கு அதெல்லாம் எதற்கு? அதன் பலனை நீங்கள் விரைவில் அறிந்து கொள்ளப் போகிறீர்கள்.

சாது : நீ ஏதாவது சங்கடத்திற்குள் மாட்டிக் கொள்ளக் கூடாது. அதுதான் எனக்குக் கவலை.

வசந்தா : ஒரு சங்கடமும் வராது. நீங்கள் கவலைப் படவேண்டாம்.

சாது : வசந்தா, நான் உன்னை என் மகள்போலப் பாவித்திருக்கிறேன். அதனாலேயே நீ துடுக்காகப் பேசினாலும், ஆச்ரம விதிகளுக்குச் சற்று தவறி நடந்தாலும் நான் பொருட்படுத்துவதில்லை.

வசந்தா : சுவாமி, அதையெல்லாம் நீங்கள் தெரிவிக்காமலேயே நான் உணர்ந்திருக்கிறேன். உங்களுடைய இளகிய சிந்தையை நினைத்துவிட்டு என் கணவருடைய கடுமையான கண்டிப்பையும் நினைத்தால் எவ்வளவு வேறுபாடு தெரிகிறது!

சாது : அதற்கு முக்கியமாக உன் உள்ளந்தான் காரணம்—இங்கே நீ சுதந்திரமாக இருப்பதாக நினைக்கிறாய், எவ்வகையிலாவது இந்த இடம் பிடிக்காவிட்டால் உடனே இதை விட்டுச் சென்றுவிட உனக்கு எந்த நிமிஷமும் உரிமையிருப்பதாக உணர்ந்திருக்கிறாய். ஆனால் கணவன் வீடென்றவுடனே உன்னைக் கட்டுப்படுத்த அங்கே ஒருவர் இருப்பதாக உனக்குத் தோன்றுகிறது. அதனாலேயே அவர் ஏதாவது சொல்வதற்கு முன்பு நீ அடிமையாக இருப்பதாக எண்ணிக்கொண்டு துன்பப் படுகிறாய்.

வசந்தா : உங்களுக்கு என் கணவரைத் தெரியாது. தெரிந்திருந்தால் இப்படிப் பேசமாட்டீர்கள்.

சாது (சிரித்து): நீ அவரை நன்கு அறிந்துகொண் டாயா?

வசந்தா: அறியாமலென்ன? நன்ருக எனக்குத் தெரியும்.

சாது: அவருக்கு உன்னிடம் அன்பில்லையா?

வசந்தா: இல்லையென்றுசொல்லமாட்டேன். ஆனல் அந்த அன்பிலே...

சாது: சரி, உனக்கு அவரிடத்திலே அன்புண்டா?

வசந்தா: நிச்சயமாக உண்டு. அவர் மட்டும் அத்தனை கண்டிப்பாக இருந்திராவிட்டால் நான் துறவு பூண நினைத்திருக்கமாட்டேன்.

சாது: அவர்தான் தவறு செய்துவிட்டார் என்றே வைத்துக்கொள்வோம். உன்னுடைய அன்பு உண்மை யாக இருந்தால் நீ அவரை அனுசரித்து நடந்திருக்கலா மல்லவா?

வசந்தா: சுவாமி, இப்படி யெல்லாம் பேசுவது சுலபம். உங்களுக்கு இல்லறத்திலிருக்கிற கஷ்டங்கள் என்ன தெரியும்?

சாது: கஷ்டமென்பது எங்குமே இருக்கிறது. துற வறத்தில் இல்லையா? துறவு நிலையிலிருந்து தவறிய வர்கள் எத்தனையோ பேர்......உண்மையான தைரிய மென்ருல் கஷ்டத்தை எதிர்த்து நிற்கப் பழகவேண்டும்.

வசந்தா: சுவாமி, உங்களுக்கு எதற்கு இந்தக் கவலை? என்னுடைய காரியத்தை நானே கவனித்துக் கொள்ளுகிறேன். நீங்கள் அமைதியாகத் தியானத்திலும், பாட்டுப் பாடுவதிலும் உங்கள் நேரத்தைக் கழியுங்கள்.

சாது (சிரித்துக்கொண்டு) : சரியம்மா, உன்னிஷ்டம் போலவே செய்கிறேன். இப்போ நீ போய்க் குளித்து விட்டுவா, காலைப் பூஜைக்கு நேரமாய்விட்டது...

[வசந்தா புறப்படுகிருள்.]

திரை

## காட்சி இரண்டு

[இரவு எட்டு மணி யிருக்கும். தாமோதரனுடைய இல்லம். தாமோதரனும் பாக்யலக்ஷ்மியும் பேசிக்கொண்டிருக்கிருர்கள்.]

தாமோதரன் : பாக்யலக்ஷ்மி, நாளைக்கு ஆபீஸ் மானேஜர் வீட்டிலே ஒரு விசேஷம் நடக்கப் போகிறது. அதற்கு நான் போகாமலிருக்க முடியுமா?

பாக்யலக்ஷ்மி : உங்களைப் போக வேண்டாமென்று நான் என்றைக்காவது சொல்லி யிருக்கிறேனு?

தாமோதரன் : வெறுங்கையாக விசேஷத்திற்கு எப்படிப் போவது? வருகிறவர்களெல்லாம் ஏதாவது பரிசு வாங்கி வந்து வைப்பார்கள்......

பாக்யலக்ஷ்மி : அதற்குத்தான் என்னிடம் இந்தப் பேச்சை ஆரம்பித்தீர்களா? உங்களுடைய செலவுகளுக் கெல்லாம் வழி செய்வதற்கு நான் என்ன செய்யமுடியும்? இருந்த நகைகளை யெல்லாம் ஒவ்வொன்ருகக் கொடுத்து விட்டேன். இனி என்னிடம் என்ன இருக்கிறது?

தாமோதரன் : அப்படியானல் எல்லோருக்கும் முன் னுலே நான் நாளைக்கு அவமானப்பட வேண்டியதுதான். இல்லாவிட்டால் விசேஷத்திற்கே போகாமல் இருந்துவிட

வேண்டும். போகாவிட்டால் என்னைப்பற்றி அவர் தவருக நினைத்துக் கொள்வார். ஆபீசுக்குப் போய் அவர் முகத்திலேயே விழிக்க முடியாது.

பாக்யலக்ஷ்மி : உங்களுக்கு அவமானம் ஏற்படு வதை நான் சகித்துக்கொண்டிருக்கமாட்டேன். ஆனல், நீங்கள் பணம் வேண்டுமென்பது அந்த விசேஷத்திற்குத் தானே? அல்லது......

தாமோதரன் : நிச்சயமாக அதற்குத்தான். நேற்று அழைப்புக் கடிதம் வந்ததை நீ கூடப் பார்த்தாயே?

பாக்யலக்ஷ்மி : அதிலே பரிசுகள் வழங்கக் கூடா தென்று அச்சிட்டிருந்ததே?

தாமோதரன் : அப்படித்தான் போடுவது வழக்கம். இருந்தாலும் எல்லோரும் அவரவர்களுடைய மரியாதை யைக் காண்பித்துக் கொள்ளவேண்டும்.

பாக்யலக்ஷ்மி : என்னிடத்திலே இந்த மோதிரம் ஒன்றுதான் இருக்கிறது. இதை வேண்டுமானுல் எடுத்துக் கொள்ளுங்கள்.

தாமோதரன் (மோதிரத்தைக் கையில் வாங்கிப் பார்த்துவிட்டுப் படபடப்புடன்) : பச்சைக்கல் மோதிரமா? உனக்கு இது எப்படி கிடைத்தது?

பாக்யலக்ஷ்மி (தடுமாற்றத்துடன்) : நான்......என் தாயார் எனக்குச் செய்து போட்ட நகைகளில்......

தாமோதரன் : அடி துரோகி......பொய் சொல்லி என்னை ஏமாற்றவா பார்க்கிறுய்? உன்னுடைய நடத்தை யெல்லாம் எனக்குத் தெரியும். உண்மையைச் சொல்லா விட்டால் உன்னை உயிரோடு விடமாட்டேன்.

பாக்யலக்ஷ்மி: நான் ஒன்றும் குற்றம் செய்ய வில்லையே? எதற்காக இப்படித் திடீரென்று கோபிக் கிறீர்கள்?

தாமோதரன்: எதற்காகக் கோபமா? ம்...இன்னும் இவ்வாறு பேசுவதற்கு உனக்கு நெஞ்சம் துணிகிறதா? உனக்கு மோதிரம் கொடுத்தானே அவன் யார்?

பாக்யலக்ஷ்மி: ஐயோ, இதென்ன பெரும் பழியாக இருக்கிறது?—நான் ஒரு பாவமும் செய்தறியேனே?

தாமோதரன்: போதும் வாயை மூடு. உன்னைக் கற்பரசி என்று நினைத்து நான் உள்ளம் பூரித்ததெல்லாம் வெறுங்கனவாக முடிந்துவிட்டது. நீ ஒரு வேசியென் பதை நான் இப்பொழுது அறிந்துகொண்டேன்.

பாக்யலக்ஷ்மி: ஐயோ, நீங்கள் என்னை என்ன செய்தாலும் நான் மௌனமாக ஏற்றுக்கொள்வேன். ஆனால், என் கற்பைப்பற்றிக் கேவலமாகப் பேசாதீர்கள். அது தெய்வத்திற்கு அடுக்காது.

தாமோதரன்: கணவனுக்குத் துரோகம் செய்து விட்டு ஊரெல்லாம் சுற்றி அலைகிற கழுதைக்குத் தெய்வம் வேறு உண்டா? அடி சண்டாளி...

பாக்யலக்ஷ்மி (விம்மி): நான் சத்தியமாகச் சொல் கிறேன். நீங்கள் ஏதோ தவறாக நினைத்து என்மேல் கோபிக்கிறீர்கள்—என் உயிர் போனாலும் நான் உங்களுக் குத் துரோகம் செய்ய நினைக்க மாட்டேன். என்னை......

தாமோதரன்: போதும் போதும். இந்தப் பசப்புக் கண்ணீரெல்லாம் நான் கண்டிருக்கிறேன். உன்னுடைய குற்றத்தை வெளிப்படுத்த இந்த மோதிரமொன்றே போதும்......

பாக்யலக்ஷ்மி (அழுதுகொண்டே): அந்த மோதிரம் எப்படிக் கிடைத்ததென்று வேண்டுமானால் உண்மையைக் கூறி விடுகிறேன். என்னைக் கற்பிழந்தவளென்று பேசாதீர்கள்.

தாமோதரன் (கோபத்தோடு): அப்போ முன்னால் சொன்னது பொய்தானே? அடி வெட்கங்கெட்டவளே, இனி ஒரு நிமிஷமும் என் முன்னால் நின்று பேசாதே— உடனே இந்த வீட்டைவிட்டு வெளியே போய்விடு.

பாக்யலக்ஷ்மி: ஒரு வார்த்தை கேளுங்கள்......ஒரே வார்த்தை, உண்மையைச் சொல்லுகிறேன்......

தாமோதரன்: இன்னும் பேசுகிறாயா? போ வெளியே......இங்கே நின்றால் உன் உயிரையே வாங்கி விடுவேன்.

[வெளியே பிடித்துத் தள்ளுகிறான்.]

பாக்யலக்ஷ்மி: ஐயோ...(தேம்பியழுதுகொண்டே) அந்த மோதிரம் வசந்தா...

தாமோதரன்: எல்லாம் எனக்குத் தெரியும்—போ வெளியே...

[வெளியே பாக்கியலக்ஷ்மி கதறி அழுகிற குரல் கேட்கிறது.]

பாக்யலக்ஷ்மி: ஐயோ தெய்வமே—

[தாமோதரன் கோபத்தோடு தனது இல்லத்தில் நிற்கிறான்.]

திரை

## காட்சி மூன்று

[இரவு சுமார் பத்து மணி. வசந்தா ஆச்ரமத்தில் தனது அறையில் பாடிக் கொண்டிருக்கிறாள்.]

வசந்தா: (பாட்டு) காவடிச்சிந்து மெட்டு.

ஆடுமயில் மீதிலேறி அன்பர்களைக்
காக்கும்வடி வேலன்—அவன்
ஆதிமறை வாசகத்தின் மூலன்—உமை
அம்பிகைக்கு கந்தசிறு பாலன்—உயர்
அன்பினாலவன் பாதபங்கயம் என்றுமேகதி எனறு நம்பிடும்
அடியார்களுக் கனு கூலன்

தேனும்தினை மாவும்தரும் வள்ளிமானின்
இன்பம் நிறை நேசன்—வான
தேவராஜன் பெண்மலர்நல் வாசன்—என்றன்
சிந்தையொளிர் ஞானமாம்ப்ர காசன்—நாளும்
சீர்மிகுந்திடும் ஆவினன்குடி வந்தநன்மலை மீதில் நின்றுமே
தேசமெங்கும் பார்த்தருள் உல்லாசன்

[பாக்யலக்ஷ்மி அலங்கோலமாக வருகிறாள்.]

வசந்தா: யார் பாக்யலக்ஷ்மியா? ஏன் இப்படி அலங்கோலமாக இந்த இரவு நேரத்தில் வருகிறாய்?

பாக்யலக்ஷ்மி: அக்கா, எனக்கு அபாண்டமான பழி வந்து நேர்ந்தது. ஒரு பாவமும் அறியாத என்னை என் கணவர் சந்தேகப்பட்டு வெளியே துரத்திவிட்டார்.

[அழுது விம்முகிறாள்.]

வசந்தா: நடந்த விஷயம் என்ன? அதை விபரமாகச் சொல்—சும்மா அழுதென்ன பியோஜனம்?

பாக்யலக்ஷ்மி (தேம்பிக்கொண்டே): சொல்வதற்கு என்ன இருக்கிறது? நான் கற்பிழந்த கழிசடை என்று

அவர் நினைக்கிறார். வீட்டிற்குள்ளே அடியெடுத்து வைக்கக் கூடாதென்று என்னை வெளியே தள்ளிவிட்டார். அக்கா, நான் இனி என்ன செய்வேன்?

வசந்தா : உன்னைக் கற்பிழந்தவள் என்று சொல்ல அவனுக்கு என்ன யோக்கியதை இருக்கிறது? அவன் உனக்குத் துரோகம் பண்ணினதுமில்லாமல் இப்படிப் பேசவும், வெளியே துரத்தவும் துணிவு வந்துவிட்டதா? சரி, நீ இனிமேல் என்னோடு இங்கேயே இருந்துவிடு.

பாக்யலக்ஷ்மி : அக்கா, அது என்றால் முடியாது. அவர் வைதாலும் சரி, அடித்துத் துன்புறுத்தினாலும் சரி. வீட்டோடு இருப்பதுதான் நல்லது. நான் இங்கே தங்கினால் கொஞ்சநாளில் ஊரெல்லாம் விஷயம் தெரிந்து போகும். பிறகு ஒன்றுக்குப் பத்தாக எல்லோரும் பேசிச் சிரிப்பார்கள். அவருடைய மானங் கெட்டுப் போகும். அவரிடம் சமாதானமாகப் பேசி என்னை வீட்டுக்கு அழைக்கும்படி செய்யுங்கள். நீங்கள் சொன்னால் அவர் கேட்பார்.

வசந்தா : பாக்யலக்ஷ்மி, உன்னுடைய நன்மையை உத்தேசித்துத்தான் இந்த சூழ்ச்சியை நான் செய்தேன். தாமோதரனுக்கு ஒரு பெரிய அதிர்ச்சியை உண்டாக்கி அதன் மூலம் அவனுக்கு நல்லறிவு ஏற்படும்படி செய்ய நினைத்திருக்கிறேன். நீ அவனிடம் போகக்கூடாது.

பாக்யலக்ஷ்மி : ஐயோ! நீங்களா இப்படி எனக்குத் துரோகம் செய்தது? அதற்காகவா அந்த மோதிரம் கொடுத்தீர்கள்? இது உங்களுக்கு நியாயமா? தெய்வந் தான் இதைப் பொறுக்குமா?

வசந்தா : நீ ஒன்றும் அதைரியப்பட வேண்டாம். எல்லாம் உனக்கு நன்மையாகவே முடியும்.

பாக்யலக்ஷ்மி: எனது கற்பைச் சந்தேகிக்கும்படி செய்த பிறகு இனி எனக்கு என்ன நன்மை வரப் போகிறது? ஐயோ, நான் இனி இந்த உயிரை வைத்துக் கொண்டிருந்து என்ன பயன்?

வசந்தா: தாமோதரனுடைய மனம் திருந்துவதற் காகத்தானே இந்த அதிர்ச்சித் திட்டம்? உன்னுடைய பரிசுத்தமான தன்மையை விளக்கிச் சொல்லி நானே உங்களைச் சேர்த்து வைக்கிறேன்...முதலில் அவன் தனது கெட்ட செய்கைகளை நினைத்துச் சிலநாள் வருத்தப் படட்டும்.

பாக்யலக்ஷ்மி: என்மேல் இவ்வளவு பெரிய பழியைச் சுமத்திய உங்களோடு நான் இனி ஒரு நிமிஷமும் இருக்க மாட்டேன். நான் அவரிடமே போய் அவர் என்ன செய் தாலும் அதை ஏற்றுக் கொள்கிறேன்.

[போகப் புறப்படுகிறாள்]

வசந்தா (அவளைத் தடுத்து): பாக்யலக்ஷ்மி, நீ வீட் டிற்கு இப்பொழுது திரும்பக்கூடாது. திரும்பினால் எனது முயற்சியெல்லாம் வீணாகிவிடும். உன்னுடைய பழியும் தீராது. சாது ஆத்மாநந்தரும் நான் கூறுவதையே ஆமோதிப்பார்.

பாக்யலக்ஷ்மி: அவருக்கு உங்களுடைய சூழ்ச்சி தெரியுமா?

வசந்தா: அவரிடம் நான் கூறவில்லை.

பாக்யலக்ஷ்மி: அவரைக் கலந்து கொள்ளமலா இவ்வளவு பெரிய பழி சுமத்தினீர்கள்? கற்பைச் சந்தே கிக்கும்படியாக யாராவது சூழ்ச்சி செய்வார்களா? ஆத்மா நந்தரிடம் கூறியிருந்தால் அவர் நிச்சயம் உங்களைக் கண் டித்திருப்பார். வீட்டைவிட்டு ஓடிவந்த உங்களிடம் நான் என் விஷயத்தைப் பேசியதே தவறு.

வசந்தா : இன்னும் சிறிது நேரத்தில் சாது தியானத்தை முடித்துக்கொண்டு வெளியே வருவார். அவரிடம் பேசுவோம், வா. நீ அனாவசியமாக சஞ்சலப் படாதே.

[இருவரும் புறப்படுகிறார்கள்.]

திரை

காட்சி நான்கு

*[சாது ஆத்மாதந்தரின் அறை. அவர் அமர்ந்திருக்கிறார். வசந்தாவும் பாக்யலக்ஷ்மியும் நின்று அவருடன் உரையாடிக் கொண்டிருக்கிறார்கள்.]*

சாது : வசந்தா, எனக்கு நீ கூறாமல் மறைத்து வைத்த அதிர்ச்சித் திட்டம் இதுதானா?

வசந்தா : ஆமாம் சுவாமி—இதன் மூலம் தாமோதரனைத் திருத்திவிட முடியும் என்று நான் நம்புகிறேன்.

சாது : உன்னுடைய திட்டத்திற்கு அந்த சக்தி யிருந்தாலும் அதனால் என்ன பிரயோஜனம் ?

வசந்தா : ஏன், அதுதானே நாம் விரும்புவது?

சாது : பாக்யலக்ஷ்மியை வீட்டைவிட்டு ஓட்டிய பிறகு அவர் திருந்துவதால் யாருக்குப் புண்ணியம்?

பாக்யலக்ஷ்மி : சுவாமி, இதனால் எனக்குப் பெரும் பழியல்லவோ வந்திருக்கிறது? நான் இனி என்ன செய்வேன் ?

சாது : நீ உன் கணவனுடைய துர்க்கிருத்தியங்களுக்கு அனுகூலமாக உன்னுடைய நகைகளை யெல்லாம்

தெரிந்தே கொடுத்தாய். அவ்வாறு செய்தது உத்தம நாயகி என்கிற அளவில் சரியாக இருக்கலாம். ஆனால், பிறருடைய நகைகளை வாங்கி அவருக்குக் கொடுக்க உடன்பட்டது பெரிய தவறு. அதனாலேயே இந்தச் சங்கடம் ஏற்பட்டிருக்கிறது.

பாக்யலக்ஷ்மி (இரங்கிய குரலில்): ஆமாம், நான் செய்தது தவறு என்று இப்பொழுதுதான் உணர்கிறேன். சுவாமி, எப்படியாவது என்னை இந்தத் துன்பத்திலிருந்து காப்பாற்றுங்கள். என் கணவர் திருந்தாவிட்டால் போகிறது. என்மேல் அவர் கொண்டிருக்கும் தவறான எண்ணம் மாறினால் போதும்.

வசந்தா: நீ சில நாட்கள் பொறுத்திருந்தால் எல்லாம் நன்மையாகவே முடியும் என்பது என் நம்பிக்கை.

சாது: தப்போ சரியோ நடந்ததை இனி மாற்ற முடியாது. இப்பொழுது உடனே தாமோதரன் உன்னை வீட்டுக்கு அழைக்கும்படி செய்வது முடியாது—ஆகையால் வசந்தா சொல்லுகிறபடி சில நாட்கள் பொறுக்கலாமே? அவர் கோபம் கொஞ்சம் தணியட்டும்.

பாக்யலக்ஷ்மி: சுவாமி, நான் இந்த ஆச்ரமத்திலே தங்க ஒருநாளும் சம்மதிக்க மாட்டேன். அது இன்னும் பழியை அதிகப்படுத்த இடமாகும்.

சாது: வசந்தா, எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. நீ திருச்செந்தூருக்குப் போக வேண்டுமென்று சொல்லிக் கொண்டிருந்தாயல்லவா? இப்பொழுது நீங்கள் இரண்டு பேரும் அங்கு சென்று சில நாட்கள் இருப்பது நல்லது. தொலைவாகச் செல்லுவதால் பாக்யலக்ஷ்மிக்கு ஓரளவு துயரம் தணியும்.

பாக்யலக்ஷ்மி : நான் அங்கே செல்லுவதால் என் மீதுள்ள பழி எப்படித் தீரப் போகிறது?

சாது : ஒன்றிரண்டு நாட்களுக்குள் தாமோதரன் நிச்சயம் இங்கு வருவாரென்று நினைக்கிறேன். அவர் வராவிட்டால் நான் அவரைக் கண்டு பேசி நடந்த விஷயத்தைத் தெளிவுபடுத்த முயல்கிறேன்.

பாக்யலக்ஷ்மி : சுவாமி, உங்களுக்குக் கோடி புண்ணியமுண்டு. எப்படியாவது அவரிடம் உண்மையைத் தெரிவியுங்கள். நான் எங்கு சென்றாலும் தங்களிடமிருந்து நல்ல சேதியை எதிர்பார்த்திருப்பேன்.

வசந்தா : நீங்கள் கூறுகிறபடி நாங்கள் இன்றிரவே திருச்செந்தூர் புறப்படுகிறோம்.

சாது : பாக்யலக்ஷ்மி, நீ உணவருந்தியாய்விட்டதா?

பாக்யலக்ஷ்மி : எனக்கு உணவைப் பற்றி இப்பொழுது கவலையில்லை, சுவாமி.

சாது : நீங்கள் அதிக தூரம் பிரயாணம் செய்ய வேண்டும். ஆதலால் உணவருந்தாமல் செல்லக்கூடாது. சமையலறைக்குச் சென்று பார்—ஏதாவது இருக்கும். இல்லாவிட்டாலும் விரைவிலே தயாரித்துவிடலாம்.

வசந்தா : நீ முன்னால் போ. நானும் பின்னாலேயே வருகிறேன்.

[பாக்யலக்ஷ்மி சமையலறைக்குள் போகிறாள்.]

சாது : வசந்தா, பாக்யலக்ஷ்மியை ஜாக்கிரதையாகக் கவனித்துக்கொள். திருச்செந்தூருக்குப் போன பிறகும் நீ கவனமாக இருக்கவேண்டும். இல்லாவிட்டால் அவள் உயிரையே மாய்த்துக்கொண்டாலும்...

வசந்தா : பைத்தியக்காரப் பெண், சுவாமி. எனது சூழ்ச்சியினாலே அவளுக்கு நன்மையே விளையப்போகிறது.

சாது : அவள் கற்பை உயிரைவிடப் பெரிதாக மதிக்கிறாள்.

வசந்தா : நான் மட்டும் கற்பை உயர்வாக மதிப்பதில்லையா? நான் நடத்தை தவறியதுண்டா, சுவாமி?

சாது : வசந்தா, பதட்டமடையாதே. கற்புக்குப் பங்கம் வருமாறு நீயும் நடக்கமாட்டாய் என்பது நிச்சயம். ஆனால் நெருப்போடு விளையாடுவதை நீ தவறென்று நினைப்பதில்லை. பாக்யலக்ஷ்மியின் மனப்பான்மை வேறு. கற்பு என்றால் அது அவளுக்குத் தெய்வம்போல. அதை விளையாட்டிற்காகவும் அவள் லேசாக நினைக்கமாட்டாள்.

வசந்தா : ஆமாம். அந்தப் பட்டிக்காட்டுப் பெண்ணே பெரியவள். நானும் என் படிப்பும் எல்லாம் வீண்தான்.

சாது : நான் அப்படிச் சொல்லவில்லையே? இந்தக் காலத்துப் படிப்பில்லாத பெண்களிடமும் அருமையான பண்பிருக்கிறது என்றுதான் உனக்கு எடுத்துக் காட்டினேன். அதற்காக நீ மனத்திலே வருத்தம் வைத்துக் கொள்ளாதே.

வசந்தா : சுவாமி, நீங்கள் என்ன சொன்னாலும் எனக்கு வருத்தமில்லை.

சாது : பாக்யலக்ஷ்மிக்கு ஏதாவது உணவு ஏற்பாடு செய். பிறகு இருவருமாகப் பிரயாணத்திற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்யவேண்டும்.

[வசந்தா முகவாட்டத்தோடும் ஆழ்ந்த சிந்தனையோடும் செல்கிறாள்.]

திரை

## காட்சி ஐந்து

*[சாது ஆத்மாநந்தரின் அறை. அவர் ஓர் ஆசனத்தில் அமர்ந்து தெய்வ சிந்தனையிலிருக்கிறார். காலை பத்து மணியிருக்கும். தாமோதரன் கோபமாக உள்ளே நுழைகிறான்.]*

தாமோதரன் (வெறுப்புடன்): நீதான் ஆத்மாநந்தரா?

சாது (அன்புடன்): வா, தம்பி, உங்களுக்கு என்ன வேண்டும்?

தாமோதரன்: இது சந்நியாசி ஆச்ரமமா? அல்லது வேசியர் விடுதியா?

சாது: தம்பி, ஏதோ கோபத்தோடு வந்திருப்பது போலத் தெரிகிறது—விஷயத்தைச் சொன்னால் உங்களுக்கு என்னாலான உதவியைச் செய்ய முயல்கிறேன்.

தாமோதரன்: உனது உதவி எனக்குத் தேவையில்லை. என் மனைவி பாக்யலக்ஷ்மி எங்கே?

சாது: ஓகோ, பாக்யலக்ஷ்மியின் கணவர் தாமோதரன் நீங்கள்தானா? வா, தம்பி. இப்படி உட்காருங்கள். சென்ற நான்கைந்து நாட்களாக உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

தாமோதரன்: அவளை நீ இங்கே வைத்திருக்கக் கூடாது—மரியாதையாக வெளியே அனுப்பிவிடு. இல்லாவிட்டால்...

சாது: அவள் இங்கே இல்லையே?—ஸ்தல யாத்திரை போவதாகத் தெரிவித்துச் சென்றாள்.

தாமோதரன்: அவள் மட்டுமா போனாள்?

சாது: அவளும் வசந்தாவும் சென்றார்கள். அவர்கள் புறப்பட்டுப் போய் ஐந்து நாட்களாகின்றன.

தாமோதரன் (கோபத்துடன்): அவர்களோடு கூடச் சென்றவன் யார்?—அதையும் கூறிவிடு.

சாது: அவர்கள் இரண்டு பேருந்தான் போனார்கள். அவர்களுடன் செல்லுவதற்கு வேறு யார் இருக்கிறார்கள்?

தாமோதரன் (கோபத்தோடு): யார் இருக்கிறார்களா? அந்த அயோக்கியன் வசந்தாவின் புருஷன் எங்கே? அவன் செல்லவில்லையா?

சாது (சிரிப்புடன்): வசந்தாவின் புருஷனா? அவரை விட்டு விலகித்தான் வசந்தா இங்கே வந்திருந்தாள். அவர் பட்டணத்தில் எங்கேயோ இருக்கிறார். இரண்டு பேருக்கும் கடிதப் போக்குவரத்துக்கூடக் கிடையாதே!

தாமோதரன் (ஆச்சரியத்துடன்): அப்படியா? அல்லது நீ உண்மையை மறைக்கப் பார்க்கிறாயா? சில நாட்களாக அவன் இங்கே வந்து தங்கியிருப்பதாக வசந்தா சொன்னாளே?

சாது (சிரித்து): அவள் உன்னை ஏமாற்றுவதற்கு அப்படிக் கூறியிருக்கிறாள்.

தாமோதரன்: என்னை ஏமாற்றவா? அப்போ அவள் பாக்யலக்ஷ்மியைப்பற்றிச் சொன்னதெல்லாம்...

சாது (அழுத்தமாக): சுத்தப் பொய்—தன்னைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தால் அவள் உங்கள் மனைவிமீது பழி சுமத்தியிருக்கிறாள்.

தாமோதரன் : சுவாமி, நீங்கள் கூறுவது உண்மை யாக இருந்தால் நானே பாக்கியவான்—உண்மைதானு?

சாது : பாக்யலக்ஷ்மி மகா உத்தமி. நீங்கள் சந்தோஷமாக இருக்கவேண்டுமென்று அவள் எவ்வளவோ தியாகம் செய்திருக்கிறுள்.

தாமோதரன் : பிறகு அவளுக்கு அந்த மோதிரம் எவ்வாறு கிடைத்தது?

சாது : அது வசந்தா கொடுத்தது. உங்கள் மனைவி யைப்போலவே வசந்தாவும் தனது கணவனுக்குத் தனது நகைகளைக் கொடுத்து மற்றவர்களுக்கும் கொடுக்கச் சம்மதிப்பாள் என்று நீங்கள் எப்படி நம்பினீர்கள்?

தாமோதரன் : சுவாமி, பாக்யலக்ஷ்மியைப் பழித்துக் கூறியதைக் கேட்டதும் உண்டான கோபத்தால் எனது அறிவு மங்கிப் போய்விட்டது. அதனுல், அந்த உத்த மியை வீட்டைவிட்டுத் துரத்தினேன்.

சாது : யாரோ சொல்வதைக் கேட்டு அவளிடம் உங்களுக்கு அத்தனை கோபம் உண்டாய்விட்டதே. ஆனுல் அவள் உங்களுடைய துரோகச் செயல்களை நன்ருக அறிந் திருந்தும் உங்களிடம் எவ்வளவு அன்பு கொண்டிருந்தாள் என்பதை நீங்கள் உணர்ந்தீர்களா? நீங்கள் அவளைப் புறக்கணித்து நடந்தது உங்களுக்குத் தவருகப்படவில்லை. அவள் மட்டும் அப்படி நடக்கக்கூடாது.

தாமோதரன் : சுவாமி, அதை இப்பொழுது நன்ருக உணர்கிறேன். இந்த ஐந்து நாட்களாக நான் பட்டது நரக வேதனை. அந்த அக்னியிலிருந்து தூய்மை பெற்று இன்று நான் மனிதனுகிவிட்டேன். இனித் தாங்கள் தான் எனக்கு நல்வழி காட்டி அருள் செய்யவேண்டும்.

நான் கோபத்தால் மரியாதையின்றிப் பேசியதை மன்னித்தருளுங்கள்.

சாது : தம்பி, பாக்யலக்ஷ்மியின் ஆழ்ந்த அன்பே உங்களை நல்வழிப்படுத்தியிருக்கிறது. அவளுக்கு ஏற்ற கணவராக இனிமேல் நீங்கள் நடந்துகொள்ள வேண்டும்.

தாமோதரன் : சுவாமி, இனிஅதில் தவறவே மாட்டேன். அவள் இருக்கும் இடத்திற்கு உடனே நான் போக வேண்டும். தாங்களும் என்னுடன் வந்து அவளுக்குச் சமாதானம் சொல்லுமாறு வேண்டுகிறேன். அவளிடம் எனது நடத்தைகளுக்கெல்லாம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

சாது : இன்றே திருச்செந்தூருக்குப் புறப்படுவோம்.

திரை

## காட்சி ஆறு

[திருச்செந்தூரில் கடற்கரை. வசந்தாவும் பாக்ய லக்ஷ்மியும் மணலில் தனியாக அமர்ந்திருக்கிறார்கள். மாலை நேரம்.]

பாக்யலக்ஷ்மி : தெய்வமே, ஒரு பாவமும் அறியாத என்னை நீ இப்படிச் சோதிக்கலாமா ? குற்றம் செய்தவர்களுக்கும் அருள் செய்யும் நீ என்னை இப்படிக் கண்ணெடுத்துப் பாராமல் இருக்கிறாயே? அடித்தாலும் வைதாலும் கணவனையே அண்டிக் கிடக்காமல் இப்படி நான் ஓடி வந்ததைக் குறித்து உனக்கு என்மேல் கோபமா?

[தேம்பி அழுகிறாள்.]

வசந்தா : பாக்யலக்ஷ்மி, இப்படி ஓயாமல் அழுது கொண்டிருக்காதே—உனக்கு ஒரு துன்பமும் வராது.

பாக்யலக்ஷ்மி: துன்பம் வராது, வராது என்று சொல்லிக்கொண்டு நீங்களே எனக்கு இத்தனை பெரிய துன்பத்தை உண்டாக்கிவிட்டீர்கள்.

வசந்தா: உனக்கு நன்மை செய்யவேண்டும் என்ற எண்ணத்தோடு சூழ்ச்சி செய்தேன்.

பாக்யலக்ஷ்மி: என் கணவர் இப்பொழுது என்னைப் பற்றி என்னவெல்லாம் நினைப்பாரோ? அவர் உண்மையை அறிந்து சீக்கிரம் இங்கு வருவார் என்பதற்கும் ஒரு அறி குறியும் காணவில்லை. வீட்டைவிட்டு ஓடிப் போனவள் அப்படியே தொலையட்டும் என்றிருக்கிறாரோ என்னவோ?

வசந்தா: நீ அப்படி நினைக்காதே. சாது ஆத்மாநந் தரைப் பார்க்க உன் கணவன் நிச்சயம் வருவான். ஆத்மா நந்தர் எல்லாவற்றையும் விளக்கிச் சொல்லுவார்.

பாக்யலக்ஷ்மி: என்னைத் தேடவேண்டும் என்ற எண்ணம் வந்தாலல்லவா அவர் ஆச்ரமத்திற்கு வருவார்? என்னையே வேண்டாமென்றிருந்தால்...? ஐயோ, இந்த நிலையில் நான் இந்த உயிரை வைத்துக்கொண்டிருந்து என்ன பிரயோஜனம்?

[தேம்பி அழுகிறாள்.]

வசந்தா: பாக்யலக்ஷ்மி, உனக்குக் கொஞ்சம்கூடத் தைரியமில்லை. உனது பரிசுத்தத் தன்மை சீக்கிரம் வெளி யாகாமல் போகாது—அப்பொழுது எல்லாம் இன்பமய மாக முடியும்.

பாக்யலக்ஷ்மி: கற்பு என்பது விளையாட்டுப் பொரு ளல்ல. அதைப்பற்றி லேசாக நினைக்கக்கூடாது. நீங்கள் அப்படி நினைத்துத்தானே திட்டம் வகுத்துவிட்டீர்கள்?

வசந்தா : நான் கற்பை மிக உயர்வாகத்தான் மதிக்கிறேன்—அது ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவாக இருக்க வேண்டுமென்பது நான் என்னுடைய அபிப்பிராயம்.

பாக்யலக்ஷ்மி : நாகரிகக் கல்வி கற்றுக்கொண்ட நீங்கள் அப்படியெல்லாம் பேசலாம். அதெல்லாம் எனக்குத் தெரியாது.

வசந்தா : நீ சுத்தப் பட்டிக்காட்டுப் பெண்ணாக இருக்கிறாய். உன்னுடைய அழகிற்கும் குணத்திற்கும் கொஞ்சம் சாதுரியமாக நடந்துகொள்ளப் பழகிக்கொண்டால் உன் புருஷனை உன் இஷ்டம்போல நடக்கச் செய்துவிடலாம்.

பாக்யலக்ஷ்மி : உங்களுக்கு மட்டும் அழகு குறைச்சலா? அதோடு நவநாகரிகமாக அலங்காரம் செய்துகொண்டிருக்கிறீர்களே—நீங்கள் ஏன் உங்கள் புருஷனை உங்கள் இஷ்டம்போல் நடக்கச் செய்ய முடியவில்லை?

வசந்தா (திகைத்து) : நான்தான் துறவு பூண நினைத்து வந்துவிட்டேனே?

பாக்யலக்ஷ்மி : கலியாணமாகிச் சில வருஷங்களுக்குள்ளே இல்லறத்தைத் துறக்கவேண்டுமென்று எண்ணம் வருவதற்குத் தகுந்த காரணம் இருக்க வேண்டாமா?

வசந்தா : அதெல்லாம் உனக்கெதற்கு?

பாக்யலக்ஷ்மி : நான் வெளிப்படையாகச் சொல்லுகிறேன்—நீங்கள் துடுக்குத்தனமாக அவசரப்பட்டுக் காரியம் செய்கிறீர்கள். அவ்வாறுதான் என்னைச் சங்கடத்தில் மாட்டிவிட்டீர்கள். அதே அவசரத்தால்தான் வீட்டைவிட்டு வெளியேறி இருப்பீர்களென்று நான் இப்பொழுது அறிகிறேன்.

வசந்தா :(மனதிலே வருத்தமடைந்து): பாக்ய லக்ஷ்மி, பூஜை நேரம் ஆகிவிட்டது. கோயிலுக்குள்ளே போவோம் வா—

பாக்யலக்ஷ்மி : முருகன் மீது ஏதாவது பாட்டுப் பாடுங்கள். பாட்டைக் கேட்கும்போதுதான் எனக்கு ஓரளவு நிம்மதியும், முருகன் அருள் செய்வான் என்ற நம்பிக்கையும் உண்டாகிறது.

வசந்தா : (பாட்டு)

இராகம் : காவேரி தாளம் : சாப்பு

பல்லவி

முருகா முருகா என்றால் உருகாதோ உன்றன் உள்ளம்
வருவாய் வருவாய் என்றால் பரிவோடு வாராயோ— (மு)

அநுபல்லவி

ஒருகால் உரை செய்தாலும் உன்பாதம் நினைந்தாலும்
அருளே தந்திடும் கந்தா அல்லும் பகலும் நான் (மு)

சரணம்

அறியாது நான்செய்த பிழையால் நீ வெறுத்தாயோ
அன்பே வடிவம்கொண்ட அழகா நீ சினந்தாயோ [வாய்
சிறியேன் என்குறையெல்லாம் பொறுத்தே அருள்செய்
செந்தில்மா நகர் வாழும் தேவாதி தேவனே— (மு

[இருவர் கண்களிலும் கண்ணீர் புரள்கின்றது]

பாக்யலக்ஷ்மி : அந்த முருகன்தான் நமது குற்றத்தை மன்னித்து அருள் செய்ய வேண்டும்.

வசந்தா : ஆமாம், பாக்யலக்ஷ்மி—நான் செய்தது தவறுதானோ என்று எனக்குச் சந்தேகமுண்டாகிறது.

பாக்யலக்ஷ்மி : நிச்சயம் தவறுதான். வீட்டைவிட்டு வெளியில் வந்ததே தவறு. அதே நிலையை எனக்கும் உண்டாக்கிவிட்டீர்கள்.

வசந்தா (சட்டென்று): அதோ பார்—சாது ஆத்மாநந்தர் வருகிறார். நமது துன்பமெல்லாம் தீர்ந்து போகும்.

பாக்யலக்ஷ்மி: அதோ என் கணவரும் வந்து விட்டார்.

[இருவருமாக எழுந்து வருகிறார்கள். பாக்யலக்ஷ்மி தாமோதரன் பாதத்தில் வணங்குகிறாள்]

நீங்கள் என்னை மன்னிக்கவேண்டும். அறியாமையால் வீட்டைவிட்டு ஓடிவந்துவிட்டேன். மன்னிக்க வேண்டும்.

தாமோதரன்: பாக்யலக்ஷ்மி, நீயல்லவா என்னை மன்னிக்க வேண்டும்? நான்தானே உனக்குத் துரோகம் செய்தவன்?

வசந்தா (மகிழ்ச்சியோடு): சுவாமி, எனது அதிர்ச்சித் திட்டம் பயனளித்தது பார்த்தீர்களா?

சாது: வசந்தா, அதைப்பற்றித் தாமோதரனை யல்லவா கேட்கவேண்டும்?

தாமோதரன்: உன்னுடைய அதிர்ச்சித் திட்டத்தால் நான் கொலைகாரனாகியிருப்பேன். சுவாமி உண்மையிலே தாங்கள் அன்று அவ்வளவு இனிமையாகவும் சாந்தமாகவும் பேசியிராவிட்டால் நான் என்ன செய்திருப்பேனென்று கூற முடியாது. நான் அந்த ஐந்து நாட்களும் வெறிபிடித்தவன் போலிருந்தேன்.

பாக்யலக்ஷ்மி: சுவாமி, உங்கள் ஆசிர்வாதத்தால் தான் எனக்கு எல்லாம் நன்மையாக முடிந்தது. தங்களை நான் ஒருபோதும் மறவேன்.

[ஆத்மாநந்தரை வணங்குகிறாள்.]

தாமோதரன்: சுவாமி, கோயிலுக்குச் சென்றுவிட்டு இன்றைக்கே பழனிக்குத் திரும்பலாமா?—ஊரிலே ஏதாவது கேவலமான வதந்தி பரவக் கூடாதென்பது எனது ஆசை.

சாது: நீங்களும் பாக்யலக்ஷ்மியும் இன்று புறப் படுங்கள். நான் வசந்தாவை அழைத்துக்கொண்டு நாளை வருகிறேன்.

[கோயிலில் மணியோசை கேட்கிறது.]

பூஜை நேரமாகிவிட்டது. உங்கள் மனைவியை அழைத்துக்கொண்டு கோயிலுக்குச் செல்லுங்கள். நாங்கள் பின்னாலேயே வருகிறோம்.

[தாமோதரனும் பாக்யலக்ஷ்மியும் சாதுவை வணங்கிவிட்டுப் புறப்படுகிறார்கள்.]

வசந்தா: பாக்யலக்ஷ்மி எவ்வளவு மகிழ்ச்சியோடு செல்லுகிறாள் பார்த்தீர்களா?

சாது: அவளுக்கு இனி ஒரு துன்பமும் வராது. தாமோதரன் மனம் மாறிவிட்டார்.

வசந்தா: பாக்யலக்ஷ்மியின் காதலை நினைத்துப் பார்க்கும்போது என்னைப்பற்றி எனக்கே அவமானமாக இருக்கிறது.

சாது: அவளுடைய அன்பின் சக்தியே இன்று அவள் கணவரைத் தீயவழியினின்றும் காத்திருக்கிறது.

வசந்தா: ஆமாம், சுவாமி. அது உண்மைதான். அப்படிப்பட்ட சக்தியை நான் பெறாமல் போய்விட்டேன். என் கணவர் தாமோதரனைப் போல ஒரு நாளும் தவறான வழியில் செல்லமாட்டார். அவரை நன்றாக அறிந்து கொள்ளாமல் நான் தவறு செய்துவிட்டேன். பாக்ய

மைதிலியால் எனக்கு இந்த உண்மை இன்று தெரிந்து விட்டது.

[அவள் கண்களிலே நீர் ததும்புகிறது.]

சாது: உன் கணவர் உன்னிடத்தில் ஆழ்ந்த அன்பு கொண்டவர்; ஆனால், கொஞ்சம் முன்கோபக் காரர்...அதனால்...

வசந்தா: ஆமாம், சுவாமி. நான் செய்தது தவறு தான். நீங்கள் முன்னால் இதை எடுத்துக் காட்டியபோது எனக்குத் தெரியவில்லை..

சாது: வசந்தா, வருந்தாதே—உன்னிடம் இந்த மனமாற்றத்தையே இத்தனை நாளும் எதிர்பார்த்தேன்: உன் கணவர் அடுத்த ரயிலில் இங்கே வருவார்...நீயும் பட்டணம் செல்லலாம்.

வசந்தா (மகிழ்ச்சி பொங்க): என் கணவரை உங்களுக்குத் தெரியுமா, சுவாமி?

சாது: நன்றாகத் தெரியும்—அவர் எனக்கு வெகு நாளைய சிஷ்யர். நீ ஆச்ரமத்திற்கு வந்ததும் அவருக்குக் கடிதம் எழுதிவிட்டேன். அதனாலேயே அவர் உன்னைப் பற்றிக் கவலைப்படாமல் இதுவரையிலும் இருந்தார்.

வசந்தா: அவருக்காகத்தான் எனக்கு அவ்வளவு பரிவு காட்டினீர்களோ—சுவாமி, இத்தனை நாளும் இந்த விஷயத்தை என்னிடம் சொல்லவில்லையே?

சாது: அவசரப்பட்டு உன்னிடம் சொல்லியிருந்தால் நீ உனது...

வசந்தா: ஆமாம், நான் எனது தவறை உணர்ந்து திருந்தியிருக்கமாட்டேன். சுவாமி, உங்களை நான் என்றும் மறவேன்.

[சாதுவின் பாதங்களைத் தொட்டு வணங்குகிறாள்.]

திரை